Regd. No. 2975

ஸ்ரீ:

# ஸ்ரீ ராமாநுஜன் - 331

ஆசிரியர்: P. B. அண்ணங்கராசாரியர்.

# SRI RAMANUJAN

Editor:

*Mahamahimopadhyaya*

P. B. ANNANGARACHARYA, KANCHIPURAM- 631503

வருஷச் சந்தா ரூ. 10 ஸ்ரீமியச் சந்தா ரூ. 100

---

பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்.



ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

ஆழ்வார்கள் வாழி அருளிச்செயல் வாழி*
தாழ்வாதுமில்குரவர் தாம்வாழி - ஏழ்பாரு
முய்ய வவர்க ளுரைத்தவைகள் தாம்வாழி*
செய்யமறை தன்னுடனே சேர்ந்து

1976 ஜனவரி, தைமீ

# பெருமாள் கோயில் உடையவர் திருமாளிகை ஜீர்ணோத்தாரணம்

எம்பெருமானார் ஸ்ரீபெரும்பூதூரில் அவதரித்தாரெனினும் அவர் அங்கு எழுந்தருளியிருந்தது மிகக் குறைந்த காலமே யாகும். இளமையிலே அவர் பெருமாள்கோயில் என்கிற காஞ்சீபுரத்திற்கு எழுந்தருளி ஸாமான்ய சாஸ்திரங்களை யதிகரித்தபிறகு யாதவப்ரகாசரிடம் வேதாந்தம் பயில ஆரம்பித்தார். அச்சமயம் தான் ப்ரஹ்மரக்ஷஸ்ஸு ராஜஸபையில் அவர் பெருமையை எடுத்துரைத்தது, யாதவப்ரகாசருடன் அவர் காசியாத்ரைக்கு எழுந்தருளத்தொடங்கி நடுவழியில் பின்தங்கிவிட்டது, பேரருளாளனும் பெருந்தேவித் தாயாரும் வேடவடிவில் ஸேவை ஸாதித்து இரவில் அவரை வெகு தூரத்தினின்றும் ஸ்ரீகாஞ்சிக்கு அழைத்து வந்தது, சாலக்கிணற்றிலிருந்து அவர் எடுத்துத்தந்த தூயநீரைத் தாம் பருகியது. திருக்கச்சிநம்பிகளுடன் ஸ்வாமி பழகியது, முதன்முதலாக பெரியநம்பிகளைச் சந்தித்தது, 'ஆமுதல்வனிவன்' என்று ஆளவந்தார் கடாக்ஷம்பெற்றது. ஸந்யாஸாச்ரமம் ஏற்றுக்கொண்டது, கூரத்தாழ்வான், முதலியாண்டான் முதலிய பல சிஷ்யர்களையும், யாதவப்ரகாசரையும் அநுக்ரஹித்தது என்றிவைபோன்ற பல நிகழ்ச்சிகள் நடைபெற்றன. பிறகு இங்கிருந்து தான் ஸ்வாமி அரையர்களுடன் கோயில் எழுந்தளியாயிற்று.

ஸ்வாமி இவ்வூரில் எழுந்தருளியிருந்த மடம் அப்படியே ஸேவை ஸாதிக்காமல்போனாலும் அவ்விடம் 'உடையவர் திருமாளிகை' என்கிற பெயரால் கீழண்டை கோபுரத்திற்கு எதிரில் விளங்கி வருகிறது. அதில் சிறியதோர் பழைய மண்டபத்தின் சுவற்றில் ஸ்வாமி, கூரத்தாழ்வான் மற்றும் முதலியாண்டானுடன் சித்ரரூபமாக ஸேவை ஸாதித்துவந்தார். தேவப்பெருமாளும் ஆண்டுதோறும் இரண்டொருமுறை அங்கு எழுந்தருளி மண்டபப்படியுக்ளையும் கண்டருள்வது வழக்கம். சிலஸமயம் யதோக்தகாரிஎம்பெருமானார் எழுந்தருள்வர்.

ஆக இவ்வளவு வைபவம் பெற்ற ஸ்வாமி திருமாளிகை விளங்கிய புனிதமான இடம் பாழடைந்திருப்பது ஸரியன்று. அவ்விடத்தில் ஸ்வாமியின் நினைவு கட்டிடமொன்று இருக்கவேண்டுமென்று நினையாதாரில்லை. அந் நினைவு தற்சமயம் நிறைவேறிவருகிறது. இவ்விடம் சென்னை ஸரஸ்வதீ பண்டாரத்தின் அதீனத்திலுள்ளது. தற்சமயம் அதின் கௌரவ கார்யதர்சியான ஸ்ரீமான் (சென்னை) M. A. சிங்கராசார்யர் ஸ்வாமியும், உலகம் நிறைந்த புகழாளரான ஸ்ரீமத்பரமஹம்ஸேத்யாதி ஸ்ரீமந் நாராயண ஜீயர் ஸ்வாமியும் சேர்ந்து இவ்விடத்தில் புதிதாக மண்டபத்தையும் பெரியதோர் முன் மண்டபத்தையும் நிருமாணிக்கத் தொடங்கியுள்ளார்கள். நம் ஜகதாசார்ய P. B. A. ஸ்வாமி இதற்கு அடிகல் நாட்டி வைத்தார். 60—70 ஆயிரம் ரூபாய் செலவில் நடைபெறும் இத்திருப்பணி புதுச்சேரி மாஜி உதவி உணவு அதிகாரி ஸ்ரீமான் R. அநந்தாசாரியரின் மேல் பார்வையில் வெகு விமரிசையாக நடைபெற்று வருகிறது. காஞ்சீபுரம் பக்தவத்ஸலம் பாலிடெக்னிக் ப்ரின்ஸிபால் உயர் திருவாளர் V. கலியபெருமாள் B. E, யவர்கள் அவ்வப்பொழுது கவனித்து, வேண்டிய ஆலோசனைகளையும் தந்து உதவுகிறார். நாளது சித்திரை மாதத்திற்குள் திருப்பணி முடிவடைந்து ப்ரதிஷ்டையும் நடக்கலாமென்று எதிர்பார்க்கப்படுகிறது. சிலவாண்டுகளுக்கு முன் ஷை ஸ்ரீமந்நாராயண ஜீயர் ஸ்வாமி இவ்விடத்தில் ஸ்ரீராமக்ரதுஸ்தம்பமொன்றையும் ஸ்தாபித்திருக்கிறார்.

—தி. அ. ஸம்.

# ஸ்ரீ ராமாநுஜன்—331

ஆசிரியர்:
மஹாமஹிமோபாத்யாய ஸ்ரீகாஞ்சீ ப்ரதிவாதிபயங்கரம்
அண்ணங்கராசாரியர்.

ஸம்புடம் 28 | ராக்ஷஸஸ்ரீ தைமீ 10—1—76 | ஸஞ்சிகை 7


## திருவரங்கம் பெரிய கோயிலில் திவ்யாநுபவம்

பகற்பத்து இராப்பத்தென்கிற திருவத்யயநோத்ஸவம் ஸகல திவ்யதேசங்களிலும் நடைபெற்றாலும் நம்பெருமாள் ஸந்நிதியில் நடைபெறுமடைவு பரம விலக்ஷணமென்பதை அறியாதாருமுளரோ? *தென்னரங்கர் செல்வம் முற்றும் திருத்தி வைத்தான் வாழியே* என்று நாடெங்கும் நிச்சலும் வாழ்த்தப் பெறுகின்ற எம்பெருமானாருடைய செங்கோல் செவ்வனே செல்லுமிடமன்றோ திருவரங்கத் திருப்பதி. *ராமாநுஜார்ய திவ்யாஜ்ஞா வர்த்ததாம் அபிவர்த்ததாம்* என்று இமவந்தந்தொடங்கி இருங்கடலளவும் ஸ்ரீவைஷ்ணவ ஸமுதாயமனைத்தும் மங்களாசாஸனம் செய்துவருவது பழுதுபடாமே ஓங்கிவருமழகைத் திருவரங்கத்திலன்றோ நாம் அனுபவித்து மகிழவேண்டும். இந்த மகிழ்ச்சி அடியேனுக்குப் பதினாறுவது பிராயம் முதல் நாற்பதாவது பிராயமளவும் அனேகமாக அவிச்சின்னமாய்க் கிடைத்து வந்தது. சென்னையில் பிரவசன நிர்ப்பந்தத்தை ஏற்றுக்கொண்ட காலம் முதலாக [1931 ஆம் ஆண்டு முதலாக] இப்பெரும் பாக்கியத்திற்குக் குறை விளைந்தது. ஆயினும், கார்த்திகைத்திங்களிலேயே பகற்பத்து மஹோத்ஸவம் சிற்சிலவாண்டுகளில் ப்ராப்தமாகப் பெறுவதுண்டே; அத்தகைய ஸந்தர்ப்பங்களில் இழவாமல் ஸேவித்துவரும் பாக்கியமுடையேனடியேன். அந்த பாக்கியம் இந்த ஸம்வத்ஸரத்தில் பன்னிரண்டு நாள் ப்ராப்தமாயிற்றடியேனுக்கு. திருநெடுந்தாண்டக மஹோத்ஸவமொரு நாளும் பகற்பத்து பூர்த்தியாகவும் ஏகாதசியொருநாளும் ஸேவித்து ''முகில்வண்ணவானத்திமையவர் சூழவிருப்பர் பேரின்பவெள்ளத்தே'' என்று ஆழ்வார் ஆசாஸித்தருளின பேற்றை இந்நிலத்திலேயே பெற்று அநுபவிக்கலாயிற்று. பெரியாழ்வார் *தென்னாடும் வடநாடுந் தொழ நின்ற திருவரங்கம்* என்றார். தென்னாடும் வடநாடும் மட்டுமா திருவரங்கத்தைத் தொழவருகின்றது?

*யாவரும் வந்தடிவணங்க அரங்கநகர் துயின்றவனே! என்று குலசேகராழ்வார் பணித்தபடியே எண்டிசையுமுள்ளாரும் வந்தன்றே தொழுகின்றனர். அனைவரும் ஒரே விதமான ஆனந்தத்தை யநுபவிக்க இயலாதன்றே. அவரவர்கள் தம்தமது ருசிக்கு ஏற்றபடி ஒரோ அனுபவங்களில் மண்டி ஆனந்தித்தாலும் நாம் அநுபவிக்கு மானந்தம் முக்கியமாக அரையர் ஸேவை கோஷ்டியில் அந்வயிக்குமதனால்.

பெரிய கிதயுகம் பெற்றிப் பேரின்பவெள்ளம் பெருக நடைபெறுமிந்த திவ்ய கோஷ்டி *பொலிக பொலிக பொலிகவென்று போற்றத்தக்கதாய், அரையர் ஸ்வாமிகள் ஒன்பதின்மர் விளங்க, *கண்டோங் கண்டோங் கண்டோம் கண்ணுக் கினியன கண்டோமென்று ஸஸம்ப்ரமநருத்தம் பண்ணலாப்படியமைந்திருந்த அழகு அற்புதமென்னத்தகுமத்தனை. இந்தகோஷ்டியில் தற்காலம் ஸகலவிதத்தி லும் பெரியவராயெழுந்தருளியிருக்கின்ற ஸ்ரீமதுபய வே. (அரையர்) சடகோபா சாரியர் ஸ்வாமி திருநக்ஷத்ரப்ரயுக்தமான திருமேனி தளர்ச்சியையுங்கணிசியாது கைங்கரியத்தில் பரிபூர்ணமாக அந்வயித்திருந்து அனைவரையும் ஆனந்திப்பித்தது உத்ஸவத்திற்குத் தனிப்பட்ட சிறப்பைத் தந்ததென்னத் தட்டில்லை.

ஸ்ரீமத்பரமஹம்ஸேத்யாதி. ஸ்ரீரங்கநாராயண ஜீயர் ஸ்வாமிகளும், திரு மலை திருப்பதி பெரிய ஜீயர் ஸ்வாமி, சின்ன ஜீயர் ஸ்வாமிகளும், ஸ்ரீமந்நாராயண ராமாநுஜஜீயர் ஸ்வாமியுமாக ஜீயர் ஸ்வாமிகள் நால்வர் கோஷ்டியை யலங்கரித் தருளியிருந்தது விசேஷித்த வைபவம். *தொல்லையின்பத்திறுதி கண்டேன்*.

# சிறிது மார்கழித் திங்களநுபவம்

## வஸுதேவதேவகிகளின் தௌர்ப்பாக்யமும் நந்தகோப யசோதைகளின் ஸௌபாக்யமும்

வஸுதேவதேவகிகள் கண்ணபிரானை மகனாகப் பெறப்பெற்ற பாக்யசாலி களேயானாலும் அவனது திவ்யாத்புத சேஷ்டிதங்களில் ஏகதேசமும் அநுபவிக்கப் பெற்றிலர்கள், *பிள்ளை செய்வன காணாத் தெய்வத் தேவகி புலம்பிய புலம்பலைக் குலசேகராழ்வார் கல்லுங் கரையப் பேசியுள்ளார்.

1. என்வாயிடை நிறையத் தாலொலித்திடும் திருவினையில்லாத் தாயரில் கடையாயின தாயே,
2. ஆலையிற்கிடந்த கிடக்கை கண்டிடப்பெற்றிலே னந்தோ! கேசவா கெடுவேன் கெடுவேனே.
3. நந்தன் பெற்றனன் நல்வினையில்லா நங்கள்கோன் வசுதேவன் பெற்றி லனே.
4. அளவில் பிள்ளைமை யின்பத்தை யிழந்த பாவியேன் எனதாவிநில்லாதே.
5. திருவிலேன் ஒன்றும் பெற்றிலேன் எல்லாம் தெய்வநங்கை யசோதை பெற்றாளே.
6. வண்ணச் செஞ்சிறு கைவிரலனைத்தும் வாரிவாய்க்கொண்ட அடிசிலின் மிச்சல் உண்ணப் பெற்றிலேன் ஓ கொடுவினையேன்!

7. வாயிலே முலையிருக்க என்முகத்தே யெழில்கொள் நின்திருக்கண்ணிணை நோக்கத் தன்னையுமிழந்தே னிழந்தேனே!

8. அழுகையு மஞ்சிநோக்கு மந்நோக்கும் அணிகொள் செஞ்சிறுவாய் நெளிப்பதுவும் தொழுகையுமிவை கண்டவசோதை தொல்லையின்பத் திறுதி கண்டாளே.

9. வென்றிசேர் பிள்ளை நல்விளையாட்டமனைத்திலும் அங்கென்னுள்ளமுள் குளிர ஒன்றுங் கண்டிடப் பெற்றிலேனடியேன்!

என்றிங்ஙனேயாயிற்றுத் தேவகி புலம்பல்; இது வஸுதேவருடைய புலம்பலுக்கும் உபலக்ஷணம். இனி நந்தகோப யசோதைகளின் பாக்கிய பரிபாகப்ரணுளிகளை என் சொல்லுவது? ஒரு மஹாகவி நந்தகோபரைப்பற்றிக் கூறினர்—

"ச்ருதிமபரே ஸ்ம்ருதிமபரே பாரதமபரே பஜந்து பவபீதா:,
அஹமிஹ நந்தம் வந்தே யஸ்யாளிந்தே பரம் ப்ரஹ்ம."

என்றார். ச்ருதிகளோ ஸ்மிருதிகளோ பாரதமோ பாகவதமோ எதுவும் எனக்கு வேண்டா. நந்தகோபனொருவனையே தஞ்சமாகப் பற்றுவன் நான்; அவன்றனக்கு வந்த ஏற்ற மென்னென்னில்; [பரம் ப்ரஹ்ம யஸ்ய அளிந்தே] கண்டூஷம் செய்கிற வாசல் திராங்கிக்கு அளிந்தமென்று பெயர். நந்தகோபனுடைய மனைவாசல் திராங்கியிலன்றோ பரமபுருஷன் தவழ்ந்து விளையாடிப் புரண்டுகிடந்தான். இந்த பாக்கியம் வேறு யார்க்குண்டு?

நம்மாழ்வார் நந்தகோபனை நிதியெடுத்தவ னென்கிறார். "எடுத்த பேராளன் நந்தகோபன்றன் இன்னுயிர்ச் சிறுவனே!" என்றன்றோ கண்ணனை விளிக்கின்றாராழ்வார். உண்மையில் நந்தகோபனுக்குக் கண்ணபிரான் கிடைத்தது ஜன்ம தரித்ரனுக்கு நவநிதிகிடைத்தது போலவேயன்றோ? அவனுக்குக் கண்ணன் கிடைத்தன னென்பது மட்டுமேயோ? அவனைத் தன்னிஷ்டப்படி நியமிக்கும் பாக்கியமு மன்றோ பெற்றிருந்தான். ஒருநாள் மாலைப் பொழுதில் கண்ணன் தெருவிலே சென்று நின்றான்; அப்போது யசோதை கண்ணனை நோக்கி "வானிடைத் தெய்வங்கள் காண அந்தியம்போது அங்கு நில்லேல் ஆழியங் கையனே வாராய்" என்று உள்ளே வருமாறு அழைத்தாள். அவனோ விளையாட்டில் பராக்காலே வந்திலன்; அப்போது சொல்லுகின்றாளவள்—"உந்த மடிகள் முனிவர் உன்னை நான் என் கையில் கோலால், நொந்திட மோதவுங் கில்லேன்" என்று. பயலே! இப்படி நீ துருதுருக் கையாய் வர்த்திப்பதை உன் ஸ்வாமி கண்டால் உன்னை வெறுமனே விடுவரா? சீறிச் சிவந்து பொடிக்க நிற்பரே, நானும் உன்னையடிக்கக் கோலிக் கையில் கோலை யெடுக்கிறேன், ஆனாலும் என் குழகனே அழகனே! உன்னையடிக்கக் கைவரவில்லையே! என்கிறாள். கண்ணனை ஸர்வஸ்வாமியென்று தெரிந்து கொண்டிருந்துமிவள் அவனுக்கும் ஸ்வாமியாக நந்தகோபனை வைத்து "உந்தமடிகள்" என்று சொன்ன அழகு என்னே! ஆண்டாளும் 'நாயகனாய் நின்ற நந்தகோபனென்கிறாள்.

## ஒருதலையில் இழவும் ஒருதலையில் பேறுமானவிதற்கு ஹேது

வஸுதேவதேவகிகள் பெற்றும் பேறிழந்தது ஏன்? நந்தகோபரும் யசோதையும் அசிந்திதமாக நிகரில்லாப்பேறு பெற்றது ஏன்? என்று சிந்திப்பார்க்குச் சொல்லு

கிறோம். வஸுதேவ தேவகிகள் நெடுங்காலம் தவம் புரிந்தனர்...எம்பெருமானே எமக்குப் புதல்வனாகப் பிறக்கவேணுமென்று பலவாண்டு கிடந்து நோன்பு நோற்றனர். இத்தகைய ஸாதநாநுஷ்டானத்தை எம்பெருமான் ஸஹிக்குமவனல்லன். தனது நிர்ஹேதுகக்ருபைக்கு வெற்றியையன்றோ அவன் விரும்புவான். சில விடங்களில் அல்பவ்யாஜமாத்திரத்தை எதிர்பார்ப்பதுமுண்டு. மிகச் சனத்த ஸாதநாநுஷ்டானம் காணுமிடத்து அவத்யம் காட்டி நிற்பதும் அவன் செயல். வஸுதேவருடைய தீவிரமான ஸாதநாநுஷ்டானம் கண்ணபிரானுடைய திருமுகத்திலே விழிக்குமளவுக்கு உதவிற்று. அவனது தவம் அவ்வளவிலே உபக்ஷீணமாயிற்றென்க. "இருகரையுமழிக்கும் க்ருபாப்ரவாஹ முடையவன்" என்று ப்ரஸித்தனான பெருமான் அந்த அருள் வெள்ளத்தை உடனே திருவாய்ப்பாடியில் மடைமாறினன். "நிர்ஹேதுக க்ருபையின் பிரபாவம் இங்ஙனேயாயிற்று இருப்பது!" என்று காட்டினது திருவாய்ப்பாடியிலே.

## இவ்வர்த்தத்தில் வேதபுருஷனுடைய ஸம்வாதம்

வேதம் ஓதுகின்றது—"அந்நவாந் அந்நாதோ பவதி" என்று. "அந்நவாந் பவதி" என்றுவே போதுமே; 'அந்நாதோ பவதி' என்றும் தனிப்பட ஓதவேணுமோ? அன்னம் கிடைக்கப் பெற்றவன் அந்நவான். அவன் தனக்குக் கிடைத்த அன்னத்தைப் புஜிக்கமாட்டானோ? அதைப் புஜிப்பவனுசவுமாகிறானென்று தனிப்படச் சொல்லுவது எதற்காக? என்று சங்கிக்க நேரும். இந்த சங்கையைப் பரிஹரிக்கவே வஸுதேவரும் நந்தகோபரும் தோன்றினர். *அந்நவாந் பவதிக்கு வஸுதேவர் இலக்காய் நின்றார். *அந்நாதோ பவதிக்கு நந்தகோபர் இலக்காய் நின்றார். *அந்நம் ப்ரஹ்மேதிவ்யஜாநாத்* என்ற சுருதியின்படி அன்னமாகிய பரப்ரஹ்மத்தை வஸுதேவர் வெறுமனே பெற்றாரேயல்லது புஜிக்கப் பெற்றிலர்; அது பெற்றவர் நந்தகோபரேயாயினர். இவற்றுக்கு ஹேது, ஒரு தலையில் ஸாதநாநுஷ்டாநப்ராவண்யமும் மற்றொரு தலையில் அஃதில்லாமையுமேயாம். ஸாதநாநுஷ்டானம் செய்யுமாறு சாஸ்த்ரமே விதித்திருக்க அதனைப் பொல்லாங்காகக் கருதுவது கூடுமோ என்னில்; எம்பெருமானைப் பெறுதற்கு ஸாதனானுஷ்டானம் சாஸ்திர ஸம்மதமன்று *நாஹம் வேதைர்ந தபஸா... நசாபி அந்யேந ஹேதுநா, கேவலம் ஸ்வேச்சயைவாஹம் ப்ரேக்ஷே கஞ்சித் கதாசந* என்று பகவான் சொல்லி வைத்திருக்கின்றான். காலவிசேஷத்திலே ஒரு அதிகாரிவிசேஷத்தைத் தானே தன் இச்சையேயடியாகக் கடாக்ஷிப்பதாகக் கூறி யிருப்ப தொன்றே வெற்றிபெறும். "சோஸல கோகுல சராசரம் செய்யுங் குண மொன்றின்றியே அற்புதமென்னக் கண்டோம்" என்கிற ஆசார்யஹ்ருதய சூர்ணையின் வியாக்யானம் ஸேவித்துத் தெளிவது.

## கண்ணபிரானுடைய சேஷ்டித போக்யதை

திருவயோத்தியில் திருவவதரித்த இராமபிரானுடைய சரிதையைப் பன்னிரண்டு பிராயமளவும் ஒன்றுமறியப் பெறுகின்றிலோம். விச்வாமித்திர முனிவனது வேள்வி காத்ததுமுதலாகவே இராமபிரானது சரிதை ஆரம்பமாகின்றது. அப்போது இராமனுக்குப் பன்னிரண்டு வயது. அதற்கு முந்தினசரிதைகள் தெரியவருகின்றில; கண்ணபிரானுடைய சரிதைகள் பிறந்தவன்றேதொடங்கி அபரிமிதங்கள். அதிலும்

பன்னிரண்டு பிராயமளவும் பேரின்பமும் இன்சுவையும் வடிவெடுத்த சரிதைகள். பிராயம் முதிர்ந்த பிறகு செய்தருளின கீதோபதேசம், பாரதயுத்த நிர்வஹணம் முதலான பெருஞ்செயல்கள் கிடக்க நம் ஆழ்வார்களின் ஈரச்சொற்களை அப்ரமேயமாக விளைவித்தவை கண்ணபிரானுடைய சிறுச்சேவகங்களே யன்றோ. கண்ணபிரானுடைய திவ்யசேஷ்டிதங்கள் இத்தனை அற்புதமாக அமைந்தில வென்றால் ஆழ்வார்களின் அருளிச் செயல்கள் இத்தனையழகு பெற்றிருக்க விரகில்லையே. ஆண்டாள் தன்னுடைய திருப்பாவைக்குக் கண்ணபிரானுடைய கதைகளை இலக்காகக் கொண்டில ளென்றால் "கோதை தமிழ் ஐயைந்துமைந்து மறியாத மானிடரை வையஞ் சுமப்பதும் வம்பு" என்னும்படியான ஏற்றம் அதற்கு ஏற்றிராதே.

## கண்ணபிரானும் பலராமனும்

கண்ணபிரானுடைய திவ்விய சேஷ்டிதங்கள் இவ்வளவு ரஸ்யமாக அமைந்ததற்குக் காரணம் நம்பிமூத்தபிரானோடு (ஸ்ரீபலராமனோடு) சேர்க்கையே யென்று வேதாந்ததேசிகர் திருவுள்ளம் பற்றுகிறார். அவர் தசாவதார ஸ்தோத்ரத்திலன பலராமஸ்துதி பத்யத்தில்'

"க்ஷீரம் சர்க்கரயேவ யாபிரப்ருதக்பூதா: ப்ரபூதைர் குணை:
ஆகௌமாரகமஸ்வதந்த ஜகதே க்ருஷ்ணஸ்ய தா: கேலய:"

என்று பணித்தது காண்க. கண்ணபிரானோடு பலராமன் கூடியிருந்திலனாகில் கண்ணபிரானுக்கு அபாயங்கள் அபரிஹார்யமாகுமென்று பட்டர் திருவுள்ளம்பற்றுகிறார். ஸ்ரீரங்கராஜஸ்தவ உத்தரசதகத்தில் பலராமனது ஸ்துதி பத்யத்தில், 'யத் விச்லேஷல வோபி காலியபுவே கோலாஹலாயாபவத்' என்றருளிச்செய்ததுகாண்க.

ஸ்ரீவிஷ்ணுபுராணத்தில் காளியமர்த்தநம் சொல்லத்தொடங்கிய பராசர பகவான் "ஏகதா து விநா ராமம் க்ருஷ்ணோ ப்ருந்தாவநம் யயௌ" என்றார். கண்ணபிரான் நாடோறும் பலராமனோடு கூடவே விருந்தாவனம் செல்வது வழக்கம்; ஒரு நாள் அவனை விட்டுத் தனியே சென்றான். அன்று தான் காளியன் பொய்கை கலங்கப் பாய்ந்திட்டது. "தமையன் ஒருநாள் பேரநிற்க, தம்பி பாம்பின் வாயிலே புகும்படியாயிற்று" என்பது பெரியவாச்சான் பிள்ளை ஸ்ரீஸூக்தி. இதையே காட்டுவது மேலே யுதாஹரித்த பட்டர் ஸ்ரீஸூக்தி.

நம்பிமூத்தபிரான் ஆதிசேஷாம்சமாகையாலே வெண்ணிறத்தன்; கண்ணபிரானோ *கண்ணனென்னுங் கருந்தெய்வம்* என்று ப்ரஸித்தன். திருவாய்ப்பாடியில் இவ்விருவரும் முன்னும் பின்னுமாக நடந்து செல்லுமழகு வெள்ளிமலைக் குட்டியொன்று முன்னே செல்ல, நீலமணிமலைக்குட்டி யொன்று அதன் பின்னே செல்லுகின்றதோ! என்றெண்ணலாம்படி யிருந்ததாம். பெரியாழ்வார் திருமொழி (1—7—5) காண்க. *முன்னலோர் வெள்ளிப்பெருமலைக்குட்டன்* இத்யாதி.

பலராமனுக்குத் திருவாய்ப்பாடியில் நல்ல பெயர்; அவன் வம்பு தும்பு சேஷ்டைகளொன்றும் செய்வதில்லை யென்று ப்ரஸித்தி. இதனை

"மைந்நம்பு வேற்கண்ணல்லாள் முன்னம்பெற்ற வளைவண்ண நன்மாமேனி
தன்னம்பிநம்பியு மிங்குவளர்ந்தது அவனிவைசெய்தறியான்" (பெரியதிருமொழி 10-7-4)

**என்று ஆய்ச்சிகள் சொல்லுவர்கள். *அண்ணற்கண்ணனோர் மகனைப்பெற்ற அசோதை நங்காய்!* என்று யசோதைப்பிராட்டியை விளிப்பர்கள். 'அண்ணற் கண்ணன்' என்பதற்கு இருவகையாகப் பொருளருளிப்பர்; 'அண்ணல் கண்ணன்' என்று** பிரித்து 'இவனே ஸர்வ ஸ்வாமியென்று கோட்சொல்லித்தரவல்ல திருக்கண்களை யுடையவன் என்பதொன்று. 'அண்ணற்கு அண்ணன்' என்று பிரித்து அண்ண னை பலராமனுடைய பிரகிருதிக்குச் சேர்ந்திராதவன் என்பது மற்றொன்று. தீம்பு செய்ய அறியானவன்; தீம்பிலே தகணேறுமவன் இவன். நந்தகோபாலனுக்கு ஏற்றம் சொல்லுகிற ஆண்டாள் *கொந்தளமாக்கிப் பரக்கழித்துக் குறும்பு செய்வா னோர் மகனைப் பெற்ற நந்தகோபாலன்* என்கிறாள்.

கண்ணபிரான் தீமைகள்செய்ய ஆயர்மனைகளிலே புகுவன்; வீட்டிலுள்ளார் புழைக்கடைப்பக்கமாக இருக்கும் ஸமயம் பார்த்து தயிர் பால் நெய் வெண்ணெ யுள்ள அறையிலே புக்கு சேஷ்டைபண்ணுவன். சத்தம் கேட்டு ஓடிவந்து 'பயலே! யார் நீ? என்று கெட்டால் 'பலராமன் தம்பி நான்' என்பனும் கண்ணன். 'பலராமன் யோக்யனாகையாலே இவனும் யோக்யனாகவேயிருப்பன்' என்றெண்ணிக்கொண்டு போய்விடட்டுமவர்கள்' என்பது கண்ணன் கருத்துப்போலும். "பட்டிமேய்ந்தோர் காரேறு பலதேவற்கோர் கீழ்க்கன்றாய்" என்ற ஆண்டாளருளிச்செயல் ஆண்டா ளொருத்தியே பேசத்தகுவதன்றோ. ... ... ... ...

## "நானேதானாயிடுக"

### (திருப்பாவை பதினைந்தாவது பாசுரத்தில் சிறிது அநுபவம்)

ஸ்ரீ வைஷ்ணவ லக்ஷணத்தை விளக்கவந்த சாஸ்த்ரங்கள் பலவும் பலமுக மாகப் பேசியுள்ளன. *யே கண்டலக்நதுலஸீநளிநாக்ஷமாலா: யே பாஹுமூலபரி சிஹ்நிதசங்கசக்ரா:, யே வா லலாடபலகே லஸதூர்த்வபுண்ட்ரா: தே வைஷ் ணவா புவநம் ஆசு பவித்ரயந்தி" என்கிற சுலோகம் பெரும்பாலும் பலருமறிந்த தாகும். ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு இருக்கவேண்டிய வெளிவேஷங்களை மாத்திரம் இந்த ச்லோகம் தெரிவிக்கின்றதேயன்றி அந்தக்கரணத்தில் இருக்கவேண்டிய அம் சங்களில ஏகதேசத்தையும் தெரிவிக்கவில்லை. அவற்றைத்தெரிவிக்கின்ற ச்லோ கங்களும் இதிஹாஸ புராணங்களில் மிக மலிந்து கிடக்கின்றன. பகவத்கீதையில் பத்தாவது அத்தியாயத்தில் (ச்லோ 5) "அஹிம்ஸா ஸமதா" என்ற விடத்தில் ஸமதா என்பதை விவரித்தருளாநின்ற நமது பாஷ்யகாரர், 'ஸமதா—ஆத்மநி ஸுஹ்ருத்ஸு விபக்ஷேஷு ச ஸமமதித்வம்" என்று உரைத்தருளினர். அங்கு தாத் பர்ய சந்த்ரிகையில் தேசிகன் *ஸமமதிராத்ம ஸுஹ்ருத்விபக்ஷபக்ஷே—இதி பகவத் பராசரவசநமிஹ தத்தத்பதை: ஸ்மாரிதம்* என்றருளிச் செய்தார். ஸ்ரீவிஷ்ணு புராணத்தில் (3-7-20) *ந சலதி நிஜவர்ணதர்மதோ ய: ஸமமதிராத்ம ஸுஹ்ருத் விபக்ஷபக்ஷே, நஹரதி நச ஹந்தி கிஞ்சிதுச்சை: ஸிதமநஸம் தமவேஹி விஷ்ணு பக்தம்* என்றுள்ள சுலோகரத்நமே இங்கு எடுத்துக் காட்டப்பட்டதாயிற்று இதில் *ஸமமதிராத்மஸுஹ்ருத் விபக்ஷபக்ஷே* என்கிற இரண்டாவது பாதம் முக்கியமா கக் கணிசிக்கத்தக்கது. தன்னிடத்திலும் தன் நண்பர்களிடத்திலும் தன் பக்கலில் பகை பாராட்டுமவர்களிடத்திலும் ஒரு நிகரான புத்தியை யுடையவனா யிருப்பவன் எவனோ அவனே ஸ்ரீ வைஷ்ணவன் என்று இதனால் தெரிவிக்கப்படுகின்றது.

இப்படிப்பட்ட ஸ்ரீவைஷ்ணவத்வம் ப்ரஹ்லாதாழ்வான் போல்வாரிடத்தில் இருந்ததாகக் கதைகளில் கேட்டுவருகின்றோே மத்தனையல்லது இக்காலத்தில் சில வ்யக்திகளிடத்திலாவது இதைக் காணமுடியுமோஎன்றுபார்த்தால் முடியாதென்றே முடிவுகட்டவேண்டியதாகும். முற்காலத்தில் பட்டர் நம்பிள்ளை போல்வாருடைய சில இதிஹாஸங்களைக் கேட்கும் போதும் புத்தகங்களில் வாசிக்கும் போதும் 'உண்மையாக இங்ஙனே நடந்திருக்குமா!' என்று அதிசங்கிக்குமவர்களாக நாம் இருக்கின்றோமே தவிர 'நாமும் அந்த நடையைச் சிறிதாகிலும் அநுகரிக்க முயல வேண்டும்' என்று பாரிக்கிற அதிகாரிகள் இலரென்றே சொல்லவேண்டும்.

ஸ்ரீவசனபூஷணத்தில் ''குற்றம் செய்தவர்கள் பக்கல் பொறையும் க்ருபையும் சிரிப்பும் உகப்பும் உபகாரஸ்ம்ருதியும் நடக்கவேணும்'' என்ற விடத்து ஜீயாசார்யருடைய வியாக்கியானமான ஆய்ப்பபடியில்—

''பட்டர் ஒருநாள் பெருமாள் ஸந்நிதியிலே அநுஸந்தானம் பண்ணாநிற்க, சிலர், செவிபொறுக்கவொண்ணாத பருஷோக்திகளைப் பண்ணக் கேட்டு, சாத்தின திருவாழிமோதிரத்தையும் திருப்பரியட்டத்தையும் கொடுத்தருளி, முதலிகளைப் பார்த்து, இவர்கள் பருஷித்ததுக்கு நான் அஞ்சிக் கொடுத்தேனன்று; நாமறியாத தோஷங்களையும் பெருமாள் திருச்செவி சாத்தும்படி சொன்ன உபகாரத்தைப் பற்றிக் கொடுத்தேனத்தனை.........என்றருளிச் செய்தார்'' என்று காண்கிறது. பட்டர் தம்மை தூஷித்தவர்களுக்கு பூஷண தானமும் பீதாம்பர தானமும் செய்தருளியதாக இங்ஙனே இதிஹாஸம் காண்கிறோம். இதையெல்லாம் நாம் பிறர்க்கு எடுத்துரைக்கும்போது கல்லும் கரையும்படி உரைக்கின்றோம்; கேட்பவர்களும் கண்ணுங் கண்ணீருமாயிருந்து புளகாஞ்சிதராய்க் கேட்கிறார்கள். ஆனால் அவரவர்களுடைய அனுஷ்டானம் எங்ஙனே யிராநின்றதென்று பார்த்தால் வாய்திறக்க வழியேயில்லை.

நமக்கு நைச்யாநுஸந்தானம் ஸ்வரூபம் என்றறிந்து நாம் ''நீசனேன் நிறை பொன்றுமிலேன்'' என்றும் ''சீலமில்லாச் சிறியன்'' என்றும் பலவாறு பாசுரங்களை முன்னிட்டுத் தாழ்வு சொல்லிக்கொள்கிறோம். நம் வாயினால் வெளிவந்த அந்தத் தாழ்வுதன்னையே பிறரொருவர் நம்மை நோக்கி எடுத்துரைக்கத் தொடங்கினால், என்னையா நீசனென்றாய்? என்னையா நிறையொன்றுமில்லாதவனென்றாய்? என்னையா சீலமில்லாச் சிறியனென்றாய்? பாவீ! நீயன்றோ இப்படிப்பட்டவன்' என்று உடனே அவரை ஆயிரவகையாக தூஷிக்கவும் தண்டிக்கவும் தண்டிப்பிக்கவும் எழுகின்றோம். ஒவ்வொருவரும் தம்தம் அனுபவத்தில் இதை நிச்சயமாகக்காணலாம்.

சில விசேஷ காலங்களில் பெரியார்களை எழுந்தருளப்பண்ணி 'ஸ்வாமிந்! ஸ்ரீபாத தீர்த்தம் ஸாதிக்கவேணும்' என்று வேண்டுகிறோம். அதற்கு அவர்கள் 'ஐயோ! அடியேனுக்கென்ன யோக்யதை யுண்டு? ஸகல விதத்திலும் அயோக்யனன்றோ அடியேன்' என்று பலபடியாக நிகர்ஷாநுஸந்தானம் பண்ணுகிறார்கள். இந்த அநுஸந்தானம் உள்ளவாறு செய்கிறபடியா? அல்லது இங்ஙனே சொல்லிக் கொள்ள வேண்டுவது ஒரு உபசார வழக்கு என்று கொண்டு செய்கிறபடியா? என்று

நாம் யோசித்தால், அவர்களுடைய ஹ்ருதயத்தை நம்மால் தெரிந்து கொள்ளமுடியாதாயினும், அவர்கள் தாங்கள் அநுஸந்தித்த நீசத்தன்மையை நம் வாயினல் சொல்லிக்காட்டின விடத்தும், (அதாவது நீர் மிகவும் அயோக்கியர் என்று பிறர் சொன்ன விடத்திலும்) அவர்கள் உகந்தேயிருப்பர்களாயின் அப்போது தான் அவர்களுடைய நைச்யாநு ஸந்தானத்தை நாம் ஸஹ்ருதயமென்று நினைக்கலாகும்.

'அஹம் அமர்யாத:, அஹம் க்ஷுத்ர:' என்று நைச்யாநு ஸந்தானம் பண்ணுமவர்கள் "த்வம் அமர்யாத:, த்வம் க்ஷுத்ர:" என்கிற பரோக்திகளை உகந்திருக்கிறார்களா? என்றே நாம் பார்க்கவேண்டும். கூரத்தாழ்வான் போல்வாரான சிலரே அங்ஙன மிருந்தார்கள் என்றே சொல்லவேண்டியதாகின்றது. தம்மைப் பற்றிப் பிறர் கூறும் நிகர்ஷோக்திகளைச் சிறிதும் ஸஹியாமல் உடனே பிரபலமாக ப்ரதி ஸத்காரம் செய்யப் புறப்படுமவர்கள் தாங்கள் செய்துகொள்ளும் நிகர்ஷாநுஸந்தானம் அர்த்தமற்றது என்றே சொல்லவேண்டும்.

"ஒருவன் உன்னை இடது தாடையில் அறைந்தானாகில் உடனே அவனுக்கு நீ வலது தாடையை ஆதரவோடு காட்டு" என்று பிரஸங்க மேடைகளில் பேசுவாரை மிக மிகக் காண்கிறோம். அப்படி அவர்கள் பேசி இப்பால் வந்தவுடனே அவரை ஒருவர் அடிப்பதாகக் கையோங்கும்போதே என்ன நடக்கிறதென்பதையும் காணா நின்றோம்.

ஸபைகளில் சிலர் உபந்யாஸம் பண்ணி முடிக்கும்போது "ஒன்றுமறியாத நான் ஏதோ தப்பும் தவறுமாக உளறிவிட்டேன்; இதில் நல்லது ஒன்றுகூட இராது; சிறியேனை க்ஷமிக்கவேணும்" என்று கால்மணி காலம் சொல்லி முடிப்பர்கள். இதே வார்த்தையை அவர் அயலார் வாயில் கேட்பராகில கோபாவேசங் கொண்டு கண்கள் சிவக்கப்பெற்று "எனக்கா ஒன்றும் தெரியாது, நானா தப்பும் தவறுமாக உளறிவிட்டேன்" என்று ஆரம்பித்து (அவரே) பிரபலமாக அட்டஹாஸங்களைச் செய்வர். ஆசார்ய பீடம் வஹிக்கின்ற எந்த வ்யக்தியும் தம் நிகர்ஷத்தைத் தாம் அநுஸந்திக்கிறவர்களாக இருக்கின்றார்களேயல்லது, தம்மைப் பற்றிப் பிறர் கூறும் நிகர்ஷத்தை ஆமோதிப்பவர்களாக இல்லையே. அப்படிப்பட்டவர்களன்றோ ஸ்ரீ வைஷ்ணவத்வ பூர்த்தி யுடையவராவர்.

இக்காலத்தில் இப்படிப்பட்ட வ்யக்தி தேறுவது கஷ்டமாதலால் ஒருவரும் ஸ்ரீ வைஷ்ணவரல்லர் என்று நாம் சொல்லவும் நினைக்கவும் தகாது. *ப்ராஹ்மண்யாம் ப்ராஹ்மணாத் ஜாதத்வம் ப்ராஹ்மண்யம்* [ப்ராஹ்மண யோநியில் பிறப்பதே ப்ராஹ்மண்யம்] என்று சொல்வது போல, *வைஷ்ணவ்யாம் வைஷ்ணவாத் ஜாதத்வம் வைஷ்ணவத்வம்* [வைஷ்ணவ யோனியில் பிறப்பதே ஸ்ரீவைஷ்ணவத்வம்] என்று சொல்ல ப்ராப்தமாகிறது. அப்படிப்பட்ட ஸ்ரீவைஷ்ணவர்களுடையவும் திருவுள்ளம் புண்படாதபடி வர்த்திக்க வேண்டியது நமது கடமையே யாகும். ஒரு வைஷ்ணவருடைய திருவுள்ளம் கன்றினால் அதிற்காட்டிலும் அனர்த்தபீஜம் நமக்கு வேறில்லை என்கிற துணிவு பிறக்கவேணும். அப்படிப்பட்ட துணிவு பிறக்கப் பெற்றவர்களே ஸ்ரீவைஷ்ணவர்கள். *நானேதானாயிடுக* என்றவிடத்தில் ப்ராஸங்கிகமாக இந்த விஷயங்கள் பேசவேண்டும்படி வியாக்கியான ஸ்ரீஸூக்திகள் அமைந்துள்ளன. *

# தூயபெருநீர் யமுனைத்துறைக் கதையொன்று

யமுனையாற்றில் ஓர் மடுவிலிருந்துகொண்டு அம்மடு முழுவதையும் தன் விஷாக்கினியினால் கொதிப்படைந்த நீருள்ளதாக்கிப் பெருங்கேடு விளைத்த காளியனென்னுங் கொடிய நாகத்தைக் கண்ணபிரான் கொழுப்படக்கினனென்பது காளியமர்த்தன வரலாறு. இவ்வரலாற்றை வேதாந்த தேசிகன் யாதவாப்யுதயத்தில் கூறுமிடத்து நான்காவது ஸர்க்கத்தில் (ச்லோ. 125.) *விவிதமுநிஜநோபஜீவ்ய தீர்த்தா விகமித ஸர்ப்பகணா பரேண பும்ஸா, அபஜத யமுநா விசுத்திமக்ர்யாம் சமித பஹிர்மத ஸம்ப்லவா த்ரயீவ* என்கிற ச்லோகத்தினால் கூறினர். ஆசார்ய ஸார்வபௌமரான ஸ்வாமி ராமாநுஜர் செய்தருளின செயலையே கண்ணபிரான் செய்த செயலுக்கு உவமையாகக் காட்டியருளினர். எங்ஙனே யென்னில், ஐந்தலை வாய்நாகமாகிய காளியன் யமுனையாற்றைக்கலக்கிக் கெடுத்ததானது—விஷவாக்குக்களான புறமதத்தவர்கள் மனம் போனபடியெல்லாம் கூறும் தவறான பொருள்களாலே வேதங்களைக் கெடுத்தபடியாம். அந்தக் கெடுதியைக் கண்ணபிரான் நீக்கி எமுனையை எல்லாரும் இனிமையாகப் பருகும்படி செய்ததானது—ஸ்வாமி ராமாநுஜர், பிறர் கூறின தவறான பொருள்களை யகற்றி நல்ல பொருள்களை வெளியிட்டு வேதத்தை ஸத்துக்களுக்கு உபஜீவ்யமாக ஆக்கினபடியாம். யமுனையாற்றின் ஸ்தானத்தில் வேதம் கொள்ளப்பட்டது; காளியன் ஸ்தானத்தில் குதர்க்கவாதிகள் கொள்ளப்பட்டார்கள்; கண்ணனுடைய ஸ்தானத்தில் ஸ்வாமி யெம்பெருமானார் கொள்ளப்பட்டார். *தூயபெருநீர் யமுனைத்துறைவனை* என்னும்படி யமுனையாறு இடையறாத பகவத்ஸம்பந்தத்தை யுடையதாயிருந்ததுபோல, வேதமும் பகவத் ஸம்பந்தத்தை நியதமாக வுடையதாயிருக்கையாலே வேதத்தை யமுனையாற்றின் ஸ்தானத்தில் கொள்வது பொருந்தும். குதர்க்கவாதிகளைக் காளியன்ஸ்தானத்தில் கொள்வதற்கான பொருத்தம் இனி உபபாதிக்கப்படுகிறது.

காளியன் ஐந்து தலைகளாலும் நஞ்சை உமிழ்ந்து நாசத்தை விளைத்தானென்று புராணங் கூறும். அப்படியே குதர்க்கவாதிகளும் ஐந்து விதமான துர்வாதங்களாலே பரமார்த்த நாசத்தை விளைவிக்கின்றனர். எங்ஙனே யென்னில்;

1. ஈச்வரனென்று ஒருவனைக் கொள்வது கூடாது; ஈச்வரனேயில்லை-என்பது ஒரு குத்ஸிதவாதம்.

2. ஈச்வரனுளனென்று இசைந்தாலும் அவன் அநுமாநத்தினால் ஸித்திப்பவனேயன்றி சாஸ்திரத்தால் ஸித்திப்பவனல்லன் என்பது மற்றொரு குத்ஸிதவாதம்.

3. சாஸ்திரங்களைக் கொண்டே ஈச்வரனை அங்கீகரித்தும் அவனுக்குக் குணங்களும் விக்ரஹமும் இல்லையென்று வாதித்தல் வேறொரு குத்ஸிதவாதம்.

4. ஈச்வரன் ஒருவனே யென்பதில்லை, பலபல ஈச்வரர்களுளரென்று பல தெய்வங்களுக்கு ஈச்வரத்வம் காட்டி வாதித்தல் இன்னுமொரு குத்ஸிதவாதம்.

5. பிரபஞ்சமே கிடையாது, எல்லாம் சூனியம் என்று ஸர்வ சூன்யவாதம் பண்ணுகை ஸர்வோத்துங்கமான குத்ஸிதவாதம்.

2

ஆக இப்படிப்பட்ட ஐவகையான அபார்த்த வாதங்களினால் வேதத்தைக் கெடுத்த குதர்க்க வாதிகள் காளிய ஸ்தானத்திலே கொள்ளப்படுவது பொருந்தும். இக்கெடுதல்களையெல்லாம் நம் ஆசார்ய ஸார்வபௌமர் ஸதர்த்த நிரூபணங்களினாலே போக்கியருளினர்.

இங்கே மற்றொரு விசேஷமும் காணலாம். "வாய்த்த காளியன்மேல் நடமாடிய கூத்தனார்" என்று சூடிக்கொடுத்த சுடர்க்கொடி பணித்தபடி காளியன் தலையிலே கண்ணபிரான் அடியிட்டு நடனம் புரிந்தாப்போல, ஸ்வாமி யெம்பெருமானாருடைய ஸம்பந்த ஸம்பந்தமுடைய நாம் "நாவலிட்டுழிதருகின்றோம் நமன்தமர் தலைகள்மீதே" என்று திருமாலை முதற் பாசுரத்தில் தொண்டரடிப்பொடி யாழ்வாரருளிச் செய்த கணக்கில் யமகிங்கரர்களின் தலையிலே அடியிட்டுக் கூத்தாடப் பெறுவோம். "ததந்யமத துர்மதஜ்வலிதசேதஸாம் வாதிநாம் சிரஸ்ஸு நிஹிதம் மயா பதமதக்ஷிணம் லக்ஷ்யதாம்" என்ற யதிராஜஸப்ததிஸூக்தியும் காண்க. இந்த உபந்யாஸம் வேதாந்திகளாய் வாக்மிகளாயிருப்பார்க்கு நாலைந்து நாள் விவரிக்கத்தகும்.

... ... ... ... *

# ஸௌபரிமஹர்ஷியின் வரலாறு

## ஸ்ரீ விஷ்ணுபுராணத்தில் நான்காவது அம்சம்-(இரண்டாமத்யாயம்)

ஸௌபரியென்னுமொரு மாமுனிவன் நீர்நிலையிலிருந்துகொண்டு பன்னிரண்டாண்டு தவம் புரியாநின்றவளவில் அங்கு ஸம்மதமென்கிறமத்ஸ்யாதிபதி தன்னுடைய ப்ரபலகுடும்பங்களோடு கூடிக் களித்து விளையாடாநின்றபடியைக் கண்ணுற்றானொருநாள். கண்ணுற்றதும் 'நாமும் இப்படி குடும்பவாழ்க்கையிற் கூடிநின்று சிற்றின்பம் நுகர்ந்து களித்தாலென்ன?' என்று தோன்றிற்று. குடும்பவாழ்க்கையில் பேராவலுண்டாயிற்று, விவாஹம் செய்துகொள்ளவேணுமென்னுமவாவினால் உடனே நீர்நிலையை விட்டுக் கிளம்பிப் பெண் விசாரிக்கப் புறப்பட்டான். அப்போது மாந்தாதாவென்னு மரசனுக்குப் பல பெண்களிருப்பதாகக் கேள்விப்பட்டு அவனிடஞ்சென்று உன்னுடைய ஐம்பது பெண்களுள் ஒருத்தியை எனக்குக் கன்னிகாதானம் செய்யவேணுமென்று வேண்டினான். அரசன் இவருடைய கிழத்தனத்தையும் குரூபத்தையுங்கண்டு பெண் கொடுக்க இசைந்திலன். இவர் மஹர்ஷியென்று அறிந்தவனாகையாலே பெண் கொடுக்க முடியாதென்றால் நம்மை சபித்துவிடுவரே யென்கிற அச்சமுண்டாகப்பெற்று சிந்தைக் கடலில் ஆழ்ந்திருந்தனன். அன்னவனை நோக்கி முனிவர் 'அரசனே! சிந்திப்பது எதற்காக? பெண்ணைப் பிறந்தவளை எப்படியும் ஒருவனுக்கு விவாஹம் பண்ணிக் கொடுத்தாகவேண்டும்; விரும்பிக்கேட்கிற எனக்குக் கொடுப்பதில் என்ன விசாரம்?' என்றார். அதற்கு அரசன் எனக்கொன்றுமாக்ஷேபமில்லை; பெண் தானாக விரும்பி வரிக்கும் வரனுக்குக் கன்னிகாதனம் செய்வது எங்கள் குலாசாரம்' என்றனன். அப்படியாகில் பெண்களிருக்குமிடத்திற்கு என்னைப் போகவிடலாமேயென்றார் முனிவர். அதற்கு இசைந்த அரசன் உடனே அந்த:புரக்காவலனான ஷண்டனை வரவழைத்து அவனோடு கூட முனிவரைக் கன்யா மண்டபத்திற்குப் போக விட்டான். முனிவர் புறப்படும் போதே தமது தவவலிமையினால் லோகோத்தரமான ஸௌந்தரியம் வாய்ந்த மேனியைப் பரிக்ரஹித்துக் கொண்டு கன்னிகைகளின் முன்னே சென்று நின்றார். நின்றதும் அங்கிருந்த

ஐம்பது பெண்களும் நான்தானிவரை மணந்துகொள்வேன், நான்தானிவரை மணந்துகொள்வேனென்று போட்டிபோட்டுக் கொண்டு மேல் விழுந்தவாறே அந்தக் காவலாளன் அரசனிடம் சென்று அறிவித்தனன். அரசன் அதுகேட்டு இதென்ன ஆச்சரியம்! இதென்ன அற்புதம்! என்று மிகவும் வியந்து ஐம்பது பெண்களையும் அம் முனிவர்க்கே விவாஹம் பண்ணிக் கொடுத்தனன். முனிவரும் விவாஹம் செய்துகொண்டு ஐம்பது மனைவியரையும் தமது ஆச்ரமத்திற்கு அழைத்துக் கொண்டுபோய் சில்பகலாநிபுணனான விச்வகர்மாவை வரவழைத்து வாபீ கூபதடாக உத்யாநாதி ஸகலாதிசய ஸம்பந்நங்களான ஐம்பது மாடமாளிகைகளை நிர்மாணம்செய்வித்து ஒவ்வொரு மாளிகையில் ஒவ்வொருத்தி மிகவின்பம் மன்னி வாழும்படி செய்வித்தார். தாமும் ஐம்பது வடிவுகளைப் பரிக்ரஹித்து அவர்களிடத்தில் ரமித்துக்கொண்டிருக்கின்றார்.

இப்படி காலம் செல்லுகையில் ஒரு நாள் மாந்தாதாவென்னு மவ்வரசன் இவர்களை க்ஷேமம் விசாரிக்கப் புறப்பட்டு வந்து முதல் மாளிகையிற் புகுந்து அங்கு வாழும் பெண்ணைக் குசலப்ரச்நம் செய்தனன். அவள் தான் ஆச்சரியமான இன்பங்களை யநுபவித்து வருவதாகச் சொல்லித் தன்னுடைய பரமஸந்தோஷத்தைக் கூறி, ஆனால் ஒரு துக்கமிருப்பதாக வுரைத்தாள்—'உம்முடைய மருமகப்பிள்ளையான முனிவர் எப்போதும் இந்த மாளிகையிலேயே கிடக்கிறார்; இவ்விடம் விட்டுப் பெயர்வதேயில்லை. இதற்காக எனது ஸஹோதரிகள் துக்கித்திருப்பார்களே என்பதொன்றே எனக்கு துக்கம்' என்றாள்.

அடைவே ஒவ்வொரு மகளையும் க்ஷேமம் விசாரிக்கப் போனவிடத்தில் ஒவ்வொருத்தியும் இவ்வண்ணமாகவே சொல்லக் கேட்ட அரசன் முனிவருடைய ப்ரபாவாதிசயமிது வென்றறிந்து, ஏகாந்தமாக வீற்றிருக்கின்ற அம் முனிவர் பக்கலிலே சென்று பூஜித்துத் தன்னுடைய பரமானந்தத்தைத் தெரிவித்து "மஹாநுபாவரே! உம்முடைய மஹத்தான தபஸ்ஸு ஸித்தியடைந்தவிதம் வாசாமகோசரமாயிருக்கின்றதே! இப்படிப்பட்ட ப்ரபாவத்தை நான் வேறு எந்த மஹர்ஷியிடத்தும் கண்டிலேன்; உம்முடைய தபஸ்ஸித்தியின் ப்ரபாவம் லோகவிலக்ஷணமாயிரா நின்றதந்தோ;" என்று புகழ்ந்து கூறிச் சில நாள் அங்கே தங்கியிருந்து ஸ்வஸ்தானம் மீண்டனன்.

ஸௌபரி முனிவருக்கு நாளடைவில் நூற்றைம்பது மக்கள் பிறந்தனர். மேன்மேலும் அவர்க்குக் குடும்ப வாழ்க்கையில் ஆசாபாசம் அளவு கடந்து பெருகிக்கொண்டே சென்றது. ஆசைகள் எவ்வளவு நிறைவேறினாலும் மேன்மேலும் புதிது புதிதான ஆசைப்பெருக்குகள் தோன்றிக்கொண்டே யிருக்கின்றனவேயன்றி ஆசையொழிவது ஈஷத்துமில்லையே யென்று மிகவும் அநுதபித்துக் காடு சென்று சேர்ந்து பரமபுருஷனிடத்திலே மனம் லயித்து முக்தி பெற்றார். ... ...

## பக்தியும் - ஆசாரமும்

உலகில் சிலர் வர்ணாச்ரமாசாரங்களில் ஜாகருகர்களாயிருப்பர்கள்; ஆனால் அவர்களுக்கு பகவத்பக்தி இல்லை யென்னும்படியாயிருக்கும். சிலர்க்கு பக்தி தலைசிறந்து விளங்கும்; ஆனால் அவர்களுக்கு வர்ணாச்ரமாசாரங்களில் சிறிதும் ச்ரத்தை

இல்லாமலிருக்கும். இவ்விரண்டு வகுப்பில் எது சிறந்தது? என்கிற விசாரம் ப்ராப்தமாயிருக்கின்றது. சாஸ்த்ரங்களை ஆராய்ந்து பார்த்தாலோ ஓரிடத்தில் வர்ணாச்ரமாசாரங்களுக்கு ப்ராதாந்யமும் மற்றோரிடத்தில் பக்திக்கு ப்ராதாந்யமும் காண்கிறது. எங்ஙனேயென்னில் "ச்ருதிஸ் ஸ்ம்ருதிர் மமைவாஜ்ஞா யஸ் தாமுல்லங்க்ய வர்த்ததே, ஆஜ்ஞாச்சேதீ மம த்ரோஹீ மத்பக்தோபி ந வைஷ்ணவ:" என்கிற பகவத்வசனம் ஸுப்ரஸித்தமானது. இதன் பொருள் என்னவென்றால், வேதங்களும் அவற்றின் உபப்ரும்ஹணங்களும் ஸாக்ஷாத் என்னுடைய கட்டளையேயாகும்; அப்படிப்பட்ட ச்ருதிஸ்ம்ருதிகளை மீறி நடப்பவன் என்னுடைய ஆஜ்ஞையை உல்லங்கனம் செய்தவனாதலால் எனக்கு த்ரோஹம் செய்தவனாகின்றான். அவன் என்பக்கலில் பக்தி பூண்டிருந்தாலும் வர்ணாச்ரமாசாரவிரஹிதனென்னுங் காரணத்தினால் அவைஷ்ணவனேயாவன் என்பதாம். ஆக இந்த பகவத் வசனத்தினால் வர்ணாச்ரமாசாரமே முக்கியமென்றும், பக்தி முக்கியமன்றென்றும் விளங்கிற்று. "வர்ணாச்ரமாசாரவதா புருஷேண பர: புமாந், விஷ்ணுராராத்யதே பந்தா நாந்யஸ் தத்தோஷகாரக:" என்று பல வசனங்களும் இதற்கு உபஷ்டம்பகமாகக் காண்கின்றன.

இனி பகவத் கீதையில் கீதாசார்யன் ஸாக்ஷாத்தாக அருளிச்செய்வது பாரீர்; அதில் ஒன்பதாமத்யாயத்தில் (30) ["அபி சேத் ஸுதுராசாரோ பஜதே மாம் அநந்யபாக், ஸாதுரேவ ஸ மந்தவ்ய: ஸம்யக் வ்யவஸிதோ ஹி ஸ:"] என்று, ஆசாரத்திற்கு அப்ராதாந்யமும் பக்திக்கு ப்ராதாந்யமும் கொடுத்துப் பேசப்பட்டிருக்கிறது. இந்த ச்லோகத்தின் கருத்தை நம்முடைய பாஷ்யகாரர் மிக வினிதாக விவரித்தருளுகிறார். அந்த பாஷ்ய ஸூக்தியையே மொழிபெயர்த்தெழுதுகிறோம்; அந்தந்த ஜாதியில் பிறந்தவர்களுக்கு இன்னது செய்யத்தக்கதென்றும் இன்னது விலக்கத் தக்கதென்றும் சாஸ்த்ரங்களிலே விதிநிஷேதங்கள் காணப்படுகின்றன; அவற்றை அநுவர்த்தியாமல் கடந்தாயினும் யாவனொருவன் நம்மிடத்திலே ஸ்வயம்ப்ரயோஜனமான பக்தியைச் செலுத்துகிறானோ அவனை ஸ்ரீவைஷ்ணவாக்ரேஸரனாக நினைத்து பஹுமானிக்கவேணும். ஏனென்றால், [ஸ: ஸம்யக் வ்யவஸிதோ ஹி] இந்த பரமபக்தனுடைய அத்யவஸாயம் மிகச் சிறந்தது. ஸ்ரீமந்நாராயணனையே தனக்குத் தெய்வமாகவும் ஆசார்யனாகவும் தோழனாகவும் பரமபோக்ய வஸ்து ஸமூஹமாகவும் கொள்ளுகையாகிற அத்யவஸாயம் பிறர்க்கு அரிதாய் இவனுக்கே எளிதாய் இருக்கின்றதன்றோ. இப்படிப்பட்ட அத்யவஸாயம் இவனுக்குண்டென்பதை அநந்ய ப்ரயோஜநமாக இவன் செய்யும் நிரந்தர பஜனத்தைக்கொண்டே அறியலாம். இப்படிப்பட்ட பக்தியுக்தனிடத்திலே ஆசார லோபம் இருந்தால் அதுவொரு பெரிய விஷயமாகக் கொள்ளத்தக்கதன்று; அது மிகச் சிறு விஷயமேயாதலால் அதுகொண்டு அநாதரியாமல் விசேஷித்து பஹுமானிக்கத் தக்கவனே—என்பது நம் பாஷ்யகாரருடைய பாஷ்ய ப்ரக்ரியை.

முதலில் உதாஹரித்த "மத்பக்தோபி ந வைஷ்ணவ:" என்ற வசனத்திற்கும் "ஸாது ரேவ ஸ மந்தவ்ய:" என்ற இந்த வசனத்திற்கும் பரஸ்பர விரோதமிருப்பதாகத் தோன்றக்கூடும். பக்தியும் ஆசாரமும் ஸமப்ரதாநமாகையாலே "ந ஹி நிந்தா ந்யாயத்தாலே விரோத சமநம் பண்ணலாமென்று சொல்லுவர்கள்.

# ஸந்தேஹ பரிஹாரப் பகுதி

ஸ்ரீ உ. வே. வித்வான் தி. அ (அக்காரக்கனி) **ஸம்பத்குமாராசாரியர்,** M.A.

சென்ற 329 ஸ்ரீராமாநுஜனில் வெளிவந்த "மமைவ துஷ்க்ருதம் கிஞ்சித் மஹத்" என்கிற வியாஸத்தைக் கடாக்ஷித்த மஹநீயர்களில் சிலர் சில ஸந்தேஹங்களைத் தெரிவித்துள்ளார்கள். அவைகளுக்குச் சுருங்க ஸமாதான முரைப்போம்.

(1) பெங்களூரிலிருந்து ஸ்ரீமான் வித்வான் பூவராஹன் ஷை வியாஸத்தில் 'ஸ்நாநம் ரோஷஜநகம்' என்கிற ஸ்ரீஸூக்திக்கு முரணாக ரோஷத்திற்குக் காரணம் தெரியவில்லை என்று எழுதியிருக்கிறதே யென்று கேட்டிருக்கிறார். அதாவது—இராவணனை முடித்து விபீஷணனுக்கு முடிசூட்டிய பிறகு பெருமாள் அவனை நோக்கி, பிராட்டியைநீராடுவித்து அலங்கரித்து அழைத்துவரவேண்டுமென்று கட்டளையிட, இதைக் கேட்கலுற்ற பிராட்டி தான் நீராடாமல், இருந்தபடியே நாயகனை ஸேவிக்க விரும்புவதாக முன்னம் சொல்லி, பிறகு அவனுடைய நிர்ப்பந்தத்தால் அப்படியே நீராடிச்செல்ல, அதனைக்கண்ட பெருமாள் சினங்கொண்டு அவளை வெறுத்துக் கொடுஞ்சொற்கள் சில கூறினரென்பது எல்லோருமறிந்த கதை. இதனால் பிராட்டி நீராடி வந்ததே பெருமாள் சினங்கொள்ள ஹேதுவாயிற்றென்று பெரியோர்கள் சொல்லிப் போருவர். இதைத் திருவுள்ளம்பற்றியே பிள்ளைலோகாசாரியர் ஸ்ரீவசனபூஷணத்தில் 'ஸ்நாநம் ரோஷஜநகம்' இத்யாதி சூர்ணையருளிச் செய்தார். இப்படியிருக்க, நாம் சென்ற வியாஸத்தில், ரோஷத்திற்குக் காரணம் விளங்கவில்லையென்று எழுதியது தவறுதானே என்பது ஸந்தேஹித்தவரின் கருத்து.

இதற்கு ஸமாதானமென்னவென்றால், நாம் எடுத்த "ஹர்ஷோ தைந்யஞ்ச ரோஷஶ்ச ராகவம் த்ரயமாவிஶத்" என்கிற ச்லோகம், பெருமாள் பிராட்டியைக் காண்பதற்கு முந்தின நிலையைப் பேசுமது. அதாவது அச்சமயத்தில் பிராட்டி பெருமாள் எதிரில் வந்திருக்கவில்லை. (முன் வியாஸத்தில் பிராட்டியைக் கண்டதும் பெருமாளுக்கு ரோஷமுண்டாயிற்றென்று எழுதியது கைபிசகாமத்தனை.) ஆகவே மேற்படி சூர்ணைக்கு வியாக்கியானம் அருளும் மணவாளமாமுனிகள் இந்த சுலோகத்தை விஷயவாக்யமாகக்கொள்ளாமல், "தீபோ நேத்ராதுரஸ்யேவ" என்கிற வேறொரு சுலோகத்தைக் காட்டியருளி, அதிலும் த்ருப்தியில்லாமல், "அன்றிக்கே" என்று தொடங்கி, வேறு வகையில் பொருளுரைத்தருளினர். அதன்படிக்கு உண்மையில் பெருமாள் (ஸ்நாநத்தைக் கண்டு) சினங்கொள்ளவேயில்லையென்றும், அவர் சினங்கொள்வரென்று பிராட்டி அச்சங்கொண்டனளத்தனையென்றும் தேறுகிறது. ஆக, நாம் காட்டிய சுலோகத்தில் பேசப்பட்ட ரோஷத்திற்கு ஸ்நாநம் காரணமன்றென்று நன்கு விளங்குகிறது. வேறு காரணமும் (வால்மீகியால் காட்டப்படவில்லை. இதையெல்லாம் மனத்தில் கொண்டு, உண்மையான காரணத்தை ஆராயவேண்டிய அவசியம் அப்பொழுது யாதுமில்லையென்று கருதி, ரோஷத்திற்குக்காரணம் விளங்கவில்லை என்று சுருக்கமாக முடித்திட்டோம்.

(2) சென்னை ஸ்ரீ உ. வே. (ராவ்ஸாஹிப்) S. ராகவையங்கார் ஸ்வாமி எழுதுகிறார்—பிராட்டி மாயமானின் கூக்குரலைக் கேட்டதும் எப்படியாவது இளைய பெருமாளைத் தமையனார் சென்ற வழியே துரத்திவிடவேணுமென்று உறுதி கொண்டு அதற்காக அவரைக் குறித்து அடாத வார்த்தைகளையெல்லாம் கொட்டி விட்டது ஒக்கும். நியாயமான நல்ல வார்த்தைகளை அவர் பொருள் படுத்தாமல் அவைகளுக்கு மறுப்புரைத்துவந்தபடியால் கொடிய சொற்களை வெளியிடவேண்டியதாயிற்று; ஆனால் பரதனையும் கூட இழுத்துப் போட்டுக்கொள்வதற்கு யாதொரு காரணமுமில்லை, அவசியமுமில்லை, ஔசித்யமுமில்லை. ஆகையால் இந்த பாகம் ப்ரக்ஷிப்தமாயிருக்கவேணும்; பரதனும் இலக்குமணனும் பெருமாளுக்குத் தீங்கிழைக்கவேணுமென்று எப்பொழுது எங்கே ஸங்கேதம் செய்துகொண்டிருக்க முடியும்? பரதன் மாமாவின் நகரம்சென்று பன்னிரண்டு ஆண்டுகள் கழித்துப் பெருமாள் வனவாஸம் புறப்பட்டிருக்கிறார். அவர் சித்ரகூடம் சேர்ந்த பிறகு தான் பரதன் அயோத்திக்கு வந்திருக்கிறான். இப்படியிருக்க அவன் எங்ஙனே இலக்குமணனைச் சந்தித்து ஸங்கேதம் பண்ணியிருப்பான்? சித்ரகூடத்தில் முதன்முதலாகப் பரதனை தூரத்தில் கண்ட இலக்குமணன் அவன்மேல் அளவு கடந்து சினம் கொள்ள பெருமாளேயன்றோ வெகு சிரமப்பட்டு அவனை அடக்கி வைத்தார். இதையறியாத வளல்லளே பிராட்டி. அவளுக்கு உந்மாதாவஸ்தையா திடீரென்று உண்டாயிற்று? ஆக இந்த ப்ரகரணத்தில் காணப்படும் பரதன் விஷயமான வார்த்தைகளெல்லாம் அநந்விதம், அத ஏவ ப்ரக்ஷிப்தம்—என்று.

இதற்கு ஸாரமான ஸமாதானம்-மாரீசனின் மாயக் குரலைக் கேட்ட பிராட்டிக்கு, அவள் பெருமாளிடம் கொண்டிருந்த அளவு கடந்த அன்பின் காரணமாக அஸ்தாநே பயமுண்டாகி, அதனால் அவள் மதியிழந்து உந்மாதமென்றே சொல்ல வேண்டிய நிலைமையை அடைந்து. இருபத்தைந்து ஆண்டுகள் நெருங்கிப் பழகியிருந்த இலக்குமணனின் நற்குணங்களையெல்லாம் அறவே மறந்து அவனை சொல்லக் கூடாத கொடிய சொற்களால் தாக்கினளென்றால், பரதனையும் கூட்டிக்கொள்வதில் என்ன வியப்பு? பிரேமத்தாலுண்டாகும் அஜ்ஞாநம் விவேகத்தை அடியோடு அழித்துவிடுமல்லவா? பரம ஸத்வமயமான பரமபதத்தில் சேவிப்படும் பக்தர்களின் ஸாமகானத்தைக் கேட்டு அது அசுரர்களின் ஆரவாரமென்று நினைத்த திருவனந்தாழ்வான் சீறி அழலுமிழுமென்று உட்கண்ணால் ஸாக்ஷாத்கரித்த திருமழிசையாழ்வார் ஸாதிக்கிறார். இதையடியொற்றியே பட்டரும் பரமபதத்தை 'ஸ்நேஹாதஸ்த்தாநரக்ஷாவ்யஸநிபிரபயப் ஶார்ங்க சக்ராஸிமுக்யை:'என்று வருணித்தார். இப்படியே பிராட்டியும் ப்ரேமத்தால் நிலை கலங்கிப் பேசினபேச்சு ஒருவிதமான யுக்திக்கும் கட்டுப்படாதாகையால் தற்சமயம் உள்ள பாடத்தில் அநுபபத்தியாதொன்றுமில்லையென்றுணரவேணும், இலக்குமணன், தன்பேரில் சாட்டப்படும் குற்றத்தைப் பொருள்படுத்தமாட்டானென்று நினைத்தே பிராட்டி, அவனுக்கு ஆக்ரேசத்தை மூட்டுவதற்காக பரதனையும் சாடினனென்றும் கொள்ளலாமே.

(3) திருவரங்கம் பெரியகோயிலிலிருந்து ஸ்ரீமான் உ. வே. வித்வான் சதாபிஷேகம் ஸ்வாமி எழுதுகிறார்-கிஞ்சித், மஹத் என்கிற பதங்களை வ்யதிகரண

மாகக்கொண்டு, சிறிய பெரிய அபசாரமென்று இரண்டைக் காட்டுவதும், அதற்காகப் பிராட்டி ப்ராயச்சித்தம் செய்து கொண்டனளென்பதும் ஈட்டு ஸ்ரீஸூக்திக்கும் ஸத்ஸம்ப்ரதாயத்திற்கும் பொருந்துமோ?—என்று. இவர்கருத்தைச் சிறிது விவரிப்போம். திருவாய்மொழியில் (4–7–1) *சீலமில்லாச் சிறியனேலும்* என்கிற பாட்டின் ஈட்டில், *மமைவ துஷ்க்ருதம் கிஞ்சித்* என்றருளிறே பிராட்டியும்......... இதுக்கடி அவர்கள் பக்சலிலே யாதல் என்பக்கலிலேயாதலாகவேணுமிறே. அவர்கள் பக்கலொரு கண்ணழிவு சொல்லலாயிருந்ததில்லை. இனி என்னுடைய பாபமேயாமித்தனையிறே. (கிஞ்சித்) நாம்தாம் ஸர்வஜ்ஞைகளல்லோமிறே யெல்லாமறிகைக்கு; அறியாதிருப்பது ஏதேனுமொன்றுண்டாகவேணுமிறே; கார்ய கல்ப்யமிறே" என்றுள்ளது ரக்ஷை பெறுவதற்கு வேண்டிய எல்லா யோக்யதைகளும் தன்னிடம் நிரம்பியிருந்தும், பெருமாள் தன்னை ரக்ஷிக்காது உபேக்ஷிப்பதற்கு ஏதோ காரணமிருந்தே தீருமன்றோ ? அது அவருடைய கடல்போல் பெரிதான தயாகுணத்தையும் அஸத்கல்பமாக்கவல்ல பெரிய பாபமேயாயிருக்கவேணும். அது இன்னதென்று அல்பஜ்ஞர்களான நம் புத்திக்கு எட்டவில்லையாயினும் ஸர்வஜ்ஞரானவர் அறியுமதே—என்பது பிராட்டியின் கருத்தாகத் தேறிற்று. ஆக கிஞ்சித் என்பதற்கு யத்கிஞ்சித்—ஏதோ ஒன்று என்பதுதான் அர்த்தம். அதை மஹத் என்பதற்கு விசேஷணமாக்கவேணும். அது இன்னதென்பது தனக்குத் தெரியாதென்றே பிராட்டி கருதினதாக அர்த்தமாயிற்று. இதற்கு விருத்தமாக, பிராட்டி பகவதபசாரமென்னும் சிறிய அபசாரத்தையும், பாகவதாபசாரமென்கிற பெரிய அபசாரத்தையும் பட்டதாக இச்ச்லோகத்திற்கு நாம் பொருள் எழுதியது எங்ஙனம் என்பது ஸந்தேஹத்தின் ஸாரம்

இதற்கு ஸாரமான ஸமாதானம்:—ஒரே வாக்கியத்திற்குப் பலவிதமான யோஜனைகளிருப்பது தவறன்று—என்பதே. இந்த ந்யாயத்தை நமது முன்னோர்கள் பலவிடங்களில் கையாண்டிருக்கின்றனர். கிஞ்கித், மஹத் என்பதற்கு சிறியது பெரியது என்கிற அர்த்தம் ஸாதாரணமாகத் தோன்றக்கூடியதேயாதலால் பிராட்டி தான் இரண்டு பாவங்கள் செய்ததாகக் கருதத் தகுதி யுண்டு. பெருமாளையும் இளையவரையும் மாயமானின் பின் அனுப்பியது தான் செய்த பெரிய குற்றமென்பதைப் பிராட்டி அடிக்கடி நினைத்து வருந்தினளென்று ஸ்ரீ ராமாயணத்தில் பலதடவை பேசப்பட்டிருக்கிறது" நூநம் ஸ காலோ ம்ருகரூபதாரீ மாமல்பபாக்யாம் லுலுபே ததாநீம், யத்ரார்யபுத்ரம் விஸஸர்ஜமூடா ராமாநுஜம் லக்ஷ்மணபூர்வஜஞ்ச" (ஸு. 28—10), "ஐயோ! என் போதாதகாலம் மாயமானின் வேடம்பூண்டு வந்து என்னை மயக்கிவிட்டபடியால், அதனால் மோஹமுற்று நான் ராமாநுஜனையும், அவனது தமையனையும் விலக்கி விட்டேனே!" என்றல்லவோ பிராட்டி புலம்புகிறாள்! இதில் மானின்பின் பெருமாளையனுப்பியது முதல் அபராதம், இளையோனையுமனுப்பியது இரண்டாவது அபராதம், என்றும் பிரியாத அவ்விருவரையும் பிரித்தது மூன்றாவது அபராதம் என்றுமன்றோ சொல்லிக்கொண்டிருக்கிறாள். இதே அபிப்ராயம், (அல்லது வருத்தம்) பத்து ஸர்க்கம் தாண்டி "மமைவ துஷ்க்ருதம்" என்கிற ச்லோகத்திலும் தலைகாட்டிற்றென்று கொள்வதில் தவறு இருப்பதாகத் தெரியவில்லை. *ஸ்வப்நேபி யத்யஹம் வீரம் ராகவம் ஸஹலக்ஷ்

மணம், பச்யேயம் நாவஸீதேயம் ஸ்வப்நோபி மம மத்ஸரீ' (3ம—21) என்கிற பிராட்டியின் வார்த்தையும் மிகவற்புதம். இதனால், மாயமானின் பின் தனித் தனியே சென்ற இராகவனும் இலக்குமணனும் பிறகு கூடினர்களோவில்லையோ வென்றும் பிராட்டி ஏங்கிக்கிடந்தனளென்று விளங்குகின்றது. தொட்டில் பருவமே பிடித்து ஒருவரையொருவர் பிரியாதிருந்தவவ்விருவரையும் தான் பிரித்துவைத் தது பெரிய தவறென்றும் அவள் வருந்தினளென்பது இதனாலும் விளங்கவில்லையா? முக்கியமான விஷய மென்னவென்றால், இவ்வர்த்தம் நாமாகக் கற்பித்ததன்று. ஆப்தரான பெரியோர் ஸாதிக்கக்கேட்ட தத்தை. ரஸோக்தியாகக்கொள்ளலாமே.

கீழே காட்டிய ஈட்டின் அரும்பதவுரையில் அப் ப்ரகரணத்திற்குத் தக்க வாறு சில விசேஷவிஷயங்கள் எழுதப்பட்டுள்ளன. அவற்றிலொன்று—ஸ்வப்ரயத் னத்தில் விச்வாஸமுடையவர்களாயிருந்தால் செய்த பாவத்தைப் போக்கிக் கொள்ள ஏதாவது ப்ராயச்சித்தம் செய்யலாம், அவன் தயையையே எதிர்பார்த் திருக்கும் பரமைகாந்தியான ப்ரபன்னனுக்கு அதுவும் செய்ய முடியாதே-என்பதாம். இதற்கு விருத்தமாகப் பிராட்டி ப்ராயச்சித்தம் செய்து கொண்டனளென்று நாம் எழுதியது ஸத்ஸம்ப்ரதாயத்திற்குச்சேருமோ?—என்பது ஒரு ஆசங்கை.

ப்ராயசித்தமென்பது, சாஸ்த்ரவிஹிதமான வ்ரதம், க்ருச்ச்ரம், சாந்த்ரா யணம், யஜ்ஞம், தாநம் முதலியவையேயாகும். பிராட்டி யிவற்றிலொன்றையும் செய்யவில்லை, செய்ய நினைக்கவுமில்லையே. தான் செய்த குற்றங்களைப் பொறுத் துத் தன்னைக் காத்தருளவேணுமென்று வேண்டிக் கொண்டனளத்தனையன்றோ? ப்ரபந்நர்களும் அபராத க்ஷாமணம் பண்ணிக்கொள்வது சிஷ்டாசாரஸித்தம். எம்பெருமானார் சரணாகதிகத்யத்தில், "க்ருதாந் க்ரியமாணாந் கரிஷ்யமாணாந் ச ஸர்வாந் அசேஷத: க்ஷமஸ்வ" என்று வேண்டிக்கொள்ளவில்லையா? "ஸ குருஷ்வ மஹோத்ஸாஹ: க்ருபாம் மயி நரர்ஷப" (38–40) என்று பிராட்டி பெருமாள் கிருபையை வேண்டியிருக்கிறாள். இதனுள் கிருபைக்கு விரோதியான பாபத்தைப் பொறுத்தருளவேணுமென்கிற வேண்டுகோளும் அடங்கியுள்ளதென்று கொள்வதில் தவறொன்றுமில்லை. திருப்பாவையின் முடிவில் ஆண்டாளும் "உன்றன்னைச் சிறு பேரழைத்தனவும் சீறியருளாதே" என்று அபராதக்ஷாமணம் செய்துகொண்டிருப் பதைக் காண்கிறோம்.

"தர்மஸம்ஸ்தாபநார்த்தாய ஸம்பவாமி யுகேயுகே" என்கிறபடியே இப் புவியிலவதரித்து திவ்யதம்பதிகள் ஸ்தாபித்த தர்மங்கள் ஒன்றிரண்டல்ல, ஒன் றிரண்டுவகையுமல்ல; ஸாதாரண தர்மம், விசேஷ தர்மம், விசேஷதர தர்மம், விசேஷதம தர்மம் என்று பலவகைப்பட்டவையாகும். அவற்றுள் நாம் நம் அதி காரத்திற்குத் தகுந்தவற்றையாராய்ந்து பின்பற்றவேணும். பிராட்டி தீக்குளித்த விஷயம் அவலம்பிக்க முடியாததொன்று. அதை அவள் செய்த ஏதோ அபசாரத் திற்கு ப்ராயச்சித்தம் என்று தானே சொல்லித் தீரவேணும். அது ப்ரபன்ன தர்மத் திற்கு விருத்தமென்று ஒருகால் தோன்றினாலும், ஏதோ வொரு ஸாமாந்ய தர் மத்தை யநுஷ்டித்துக் காட்டினபடியென்று ஸமாதானமடைவது பாங்காகும்.

# தெய்வச்செயலின் சிறப்பு

ஒரு மஹாநகரத்தில் ஒரு குடும்பம். அக்குடும்பத்தில் அருமையாகப் பிறந்து வளரும் புதல்வனுக்கு ஒருநாள் இரவில் மஹத்தான ஜ்வரபாதை உண்டாயிற்று. இரண்டு மைல் தூரத்தில் வைத்தியசாலை இருந்தது. நோயின் தன்மையைச் சொல்லியனுப்பி மருந்து வரவழைக்கலாமென்று கருதிய பெரியார், தமது பன்னிரண்டு வயதுள்ள சிறுவன் கையில் ஒரு ஸீஸாவும் ஒரு ரூபாயும் மருந்து விவரம் குறிக்கும் சீட்டும் கொடுத்து டாக்டரிடம் மருந்து வாங்கிவரும்படிசொல்லி அச்சிறுவனை யனுப்பினர். அவன் சனவேகமாசச்சென்று டாக்டரிடம் சேர்ந்தான். அப்போது இரவு சுமார் ஒன்பதுமணி. மின்னலும் காற்றும் இடியுமாயிருந்தது. டாக்டர் மருந்துசாலையின் முன்னிலையில் உட்கார்ந்து சில ஆப்தர்களான பெரிய மனிதர்களோடு பேசிக்கொண்டிருந்தார். அச்சமயம் இச்சிறுவன் சென்று செய்தியைத் தெரிவித்தும் அவர் அன்பர்களோடு வார்த்தையாடுதலில் மிக்க குதூஹலமாயிருந்ததனால் இச்சிறுவனது வேண்டுகோளைக் கணிசியாமலேயிருந்திட்டார். இவனும் சிறிது நிர்ப்பந்தித்துக் கூறவே, டாக்டர் 'இப்போது முடியாது, காலைவா' என்று அலக்ஷியமாகப் பேசினர். அதுகேட்ட சிறுவன் 'ஐயா! நான் இரண்டுமைல் தூரத்திலிருந்து வந்திருக்கிறேன்; வீட்டில் அண்ணனுக்கு நோய் மிசக் கடினமானது; இப்போது வேறெங்கும் மருந்துகிடைப்பதும் அரிதயிருக்கின்றது. இப்போதே தாங்கள் மருந்து தராவிடில் நாளை காலைவரையில் அண்ணன் ஜீவித்திருப்பானென்பதும் ஸந்தேஹம்; அன்றியும் நான் மருந்து வாங்கிக்கொண்டு போகாமல் வெறுங்கையோடு சென்றால் என் உயிர் தக்குவதும் கஷ்டமாகும். தாய்தந்தையர் என்னைப் புடைத்துவிடுவார்கள்; ஆதலால் மிகவும் தயவுசெய்து பணம் பெற்றுக்கொண்டு மருந்து தரவேணுமென்று சொல்லி, மருந்தின் விவரம்காட்டும் சீட்டையும் ஸீஸாவையும் ரூபாயையும் மேஜையின்மேல் வைத்துக் கும்பிட்டான்.

இங்ஙனம் கெஞ்சி வணங்கிக் கேட்டதைக் கண்ட அங்குள்ள பெரியார்கள் மிகவும் மனமிரங்கி டாக்டருக்குச் சாலவும் சிபார்சு செய்தார்கள். மருந்துச் சீட்டைக்கண்ட டாக்டர் அது இரண்டு மூன்று தினுசுகள் சேர்த்துக் கலந்து கொடுக்க வேண்டிய மருந்தாக இருந்தபடியால் ஸ்வாரஸ்யமான வார்த்தையை விட்டு எழுந்திருந்து இது செய்துகொடுக்க மனங்கொள்ளாமலேயிருந்தார். ஆனாலும் சிறுவனுடைய கெஞ்சுதலுக்கு மிக இரங்கிய அன்பர்கள் அதிகமாகத் தூண்டவே வருந்தியெழுந்து அதில் ஊக்கமில்லாமலே மருந்து சீட்டை நன்றாகக் கவனியாமல் வேறு சில மருந்துகளைக்கூட்டி ஸீஸாவில் கொட்டிக் கொடுத்தனுப்பிவிட்டார். சிறுவனும் மிக்க ஆனந்தத்தோடு அதை வாங்கிக்கொண்டு கனவேகமாகத் திரும்பினன்.

ஐந்துநிமிஷம் பொறுத்தபின் டாக்டருடைய கையில் வலிதான எரிச்சல் எடுத்தது. உடனே, எந்த மருந்துகளைக் கலந்து கொடுத்தோமென்று கவனிக்கத் தொடங்கினர். ஞாபகப்பிசகினால் அக்நித்ராவகமும் பாய்ஸனென மருந்து மற்றொன்

றும் கலந்து கொடுக்கப்பட்டதாகத் திண்ணமாய்த் தெரிந்து கொண்டார். கொடுத்த அந்தமருந்து உட்கொள்ளப்படுமாகில் உடனே குடல் வெந்துபோய் பிராணாபாயம் நேருவது நிச்சயம். அந்தோ! இப்படிப்பட்ட உயிர்க்கொலையான மருந்தைக்கொடுத்து விட்டோமே! சிறுவனே கனவேகமாகச் சென்றுவிட்டானே! இதுவரையில்மருந்து உபயோகிக்கப்பட்டிருக்குமானால் உயிர்ச்சேதப் நேராமலிருக்க முடியாதே, ஐயோ! கொலைபாதகனாக ஆய்விட்டேனே!, அந்தச்சிறுவன் இன்னான் இன்னவிடத்தான் என்றாவது தெரிந்தால் இப்போதே ஓடிப்போய் மருந்தை உட்கொள்ளாதபடி நிறுத்தலாம். இன்ன திக்கிலிருந்து அச்சிறுவன் வந்தானென்பதும் தெரிந்துகொள்ளாமற் போய்விட்டோமே. இரண்டுமைல் தூரத்திலிருந்து வந்ததாகச் சொன்னானேயல்லது இன்னவிடத்திலிருந்து வந்ததாக அவன் தெரிவிக்கவில்லையே! ஐயோ! இந்த நள்ளிருளில் மின்னலும் இடியும் மழையுமான இச்சமயத்தில் எந்தப்பக்கம் ஓடி எந்தவிதமாக அச்சிறுவனைக் கண்டுபிடிக்க முடியும்? தெய்வமே! என்னை இப்படியும் கொடிய கொலைபாதகனாக ஆக்கிவிடலாமோ! என்று டாக்டர் துடிக்கிறார், தவிக்கிறார், துள்ளுகிறார், கதறுகிறார், அழுகிறார், அன்பர்கள் தேற்றகில்லாது திணறுகிறார்கள். இவருடைய நிலைமை இதுவாயிருக்க;

மருந்து வாங்கிக்கொண்டு களிப்புடன் வேகமாகச்சென்ற சிறுவனோவென்றால்—இருளில் மழையில் சென்றதனால் வழியில் கால்வழுக்கிக் கீழேவிழுந்து மருந்து ஸீஸாவும் கீழே நழுவி உடைந்துபோக, மிகுந்த வருத்தத்துடன் அந்த டாக்டரிடமே திரும்பிவந்து 'ஐயா! என்கதி இப்படியாய்விட்டது; இந்தச் செய்தியைச் சொல்லிக்கொண்டு நான் வீட்டிற்குச் சென்றால் என் உயிரை வாங்கிவிடுவர்கள்; மறுபடியும் மருந்து வாங்கிக்கொள்ள என்கையில் ரூபாயுமில்லை; எப்படியாவது என்னைக்காப்பாற்ற வேண்டியது உங்கள் தருமம்; தயவுசெய்து அந்த மருந்தை மறுபடியும் கொடுத்தீர்களானால் எனது அண்ணனுடைய உயிர் பிழைப்பதற்குமுன் என்னுயிர் பிழைக்கும்' என்று சொல்லி மன்றாடினான்.

இச்செய்தி கேட்டவுடனே டாக்டருக்குண்டான ஆனந்தத்திற்கு அளவுதான் இருக்குமோ? அச்சிறுவனைத் தலைமேல் தூக்கிக்கொண்டு கூத்தாடினார், குலாவினார்; தெய்வத்தைப் போற்றினார், புகழ்ந்தார். இன்னுமென்னென்னவோ செய்தார். தெய்வபக்தி அதிகரிக்கப்பெற்றார். உடனிருந்த அன்பர்களைத் தழுவி எழுந்தும் பறந்தும் துள்ளிக்குதித்தார். உடனே அந்தச்சிறுவனைத் தமது மோட்டார்காரில் உட்காரவைத்துக்கொண்டு தாமேநோயாளியின்வீட்டுக்கு நேரில் சென்று போதுமான சிகித்ஸையை இனமாகச்செய்து விரைவில் குணப்படுத்தினார்.

## எம்பெருமானாரும் திருக்கச்சிநம்பிகளும்

திருக்கச்சிநம்பிகளின் தனியனில் "ராமாநுஜமுநேர் மாந்யம்" என்றிருப்பது ஸுப்ரஸித்தம். 'எம்பெருமானார்க்கு பஹுமாந்யர்' என்றபடி. உண்மையில் ஸ்வாமிக்கு நம்பிகளிடமிருந்த கௌரவ ப்ரதிபத்தி ஒப்பற்றதே. நம்பிகள் எந்த வருணத்தைச் சேர்ந்தவர்? என்ற விசாரம் பலர் செய்வதுண்டு. அந்த விசாரத்தில் இறங்க நமக்கு விருப்பமில்லை, எக்குலத்தினும் மிகச் சிறந்ததான தொண்டக்குலமே இவருடைய குலமாகும். *கிமப்யத்ராபிஜாயந்தே யோகிநஸ் ஸர்வயோ

நிஷ்ூ, ப்ரத்யக்ஷிதாத்மநாதாநாம் நைஷாம் சிந்த்யம் குலாதிகம்' என்றொரு ப்ரமாணவசனம் நம் ஆசாரியர்களால் எடுத்துக்காட்டப்பட்டுள்ளது. 'யோகிகள் எல்லா யோனிகளிலுமே ஜனிக்கின்றார்கள்; இவர்கள் எம்பெருமானை ஸாக்ஷாத்கரித்தவர்களாதலால் இவர்களின் குலம் முதலியவற்றைப்பற்றி ஆராய்வது கூடாது' என்பது மேலெடுத்த ச்லோகத்தின் கருத்து. எம்பெருமான் எப்படி தேவமநுஷ்ய திர்யக்யோநிகளெல்லாவற்றிலும் திருவவதாரம் செய்தருள்கின்றானோ அப்படியே அவனடியார்களும் *எந்நின்ற யோனியுமாய்ப் பிறந்து பெருமைபொலிய நிற்கிறார்கள். *ப்ராதுர்ப்பாவைஸ் ஸுரநரஸமோ தேவதேவஸ் ததீயா:* என்கிற சுலோகத்தில் இவ்வர்த்தம் மிக விளங்கக் காட்டப்பட்டது. அப்படி எம்பெருமானோடொப்பப் பெருமைபெற்ற மஹாகுல ப்ரஸூதர்களில் திருக்கச்சிநம்பிகள் தலைவராய் விளங்கினர். இவர் திருவரங்கம் பெரிய கோயிலில் ஆளவந்தாருடைய திருவடி நிழலிலே யொதுங்கி ஸாமான்ய விசேஷ சாஸ்த்ரங்களையெல்லாம் கற்று உணர்ந்து,எம்பெருமானுக்குக் கைங்கரியம் பண்ணுவதே பரமபுருஷார்த்தமென்று கடைப்பிடித்தார். அர்ச்சாவதார எம்பெருமானுக்குத் திருவாலவட்டத் திருத்தொண்டு செய்வதில் இவர்க்கு இயற்கையான குதூஹலமிருந்தது. கோயிலில் அழகிய மணவாளனுக்கு அந்தத் திருத்தொண்டு செய்யத் தொடங்கினார். உபய காவேரீ மத்யத்தில் சயனித்திருக்கின்ற அப்பெருமானுக்குத் தாபம் சிறிது மில்லாமையாலே *திருவரங்கப் பெருநகருள் தெண்ணீர்ப் பொன்னி திரைக்கையாலடி வருடப் பள்ளி கொள்ளாநின்ற நமக்கு இத்தொண்டு அபேக்ஷிதமாக இல்லையே! என்று அப்பெருமாள் அருளிச்செய்ய, அவ்விடம் விட்டுத் திருவேங்கட மலையேற வந்து சேர்ந்து அங்கே திருவேங்கட முடையானுக்கு அந்தக் கைங்கர்யத்தைச் செய்ய ஆரம்பித்தார்.

அந்தப்பெருமானும் "குளிரருவி வேங்கடத்தில் குளிர நிற்கும் நமக்கு இந்தத் திருத்தொண்டு அபேக்ஷிதமாக இல்லையே; அத்திகிரியருளாளப் பெருமான் நான்முகன் செய்த அயமேத வேள்வியில் தீயினில் தோன்றியவராதலால் அவர்க்குத் தாபம் மிக்கிருக்கும்; இக்கைங்கரியம் அவர்க்கு மிக அபேக்ஷிதமாயிருக்கும்; அங்கேறச் சென்று தொண்டு செய்துவாழ்வீராக" என்று நியமிக்க, அந்த நியமனத்தைச் சிரமேற்கொண்டு அங்கு நின்றும் புறப்பட்டு ஸ்ரீ ஹஸ்திசைல சிகரோஜ்ஜ்வல பாரிஜாதனை பேரருளாளனுடைய திருவடிவாரத்திலே விடைகொண்டு திருவாலவட்டமும் கையுமாய் *ஒழிவில்காலமெல்லா முடனாய் மன்னி வழுவிலாவடிமை செய்துவந்தார். இக்கைங்கரியம் பேரருளாளனுக்குப் பரமப்ரீதிகரமாக இருந்தபடியாலே அர்ச்சாவதார ஸமாதியைக்குலைத்துக்கொண்டும் நம்பியோடு வார்த்தையாடுவதென்கிற முறை ஏற்பட்டது. 'தேவப்பெருமாள் திருக்கச்சிநம்பியோடு வார்த்தையாடுகிறார்' என்கிற ப்ரஸித்தி ஊரெங்கும் பரவியது. [சிலர் இது அஸம்பாவிதமென்றும் கல்பிதமான ஐதிஹ்யமென்றும் சொல்லத் தலைப்பட்டிருக்கிறார்கள். மணவாளமாமுனிகள் அருளிச்செய்த தேவராஜமங்களத்தில் *ஸ்ரீ காஞ்சீபூர்ணமிச்ரேண ப்ரீத்யா ஸர்வாபிபாஷிணே, அதீதார்ச்சாவ்யவஸ்தாய ஹஸ்த்யத்ரீசாய மங்களம்* என்றுள்ளது ப்ரஸித்தம் அர்ச்சாவதார வரம்பைக் கடந்து பரமப்ரீதியினால் திருக்கச்சிநம்பியோடு எல்லாவார்த்தைகளையும் அருளிச்

செய்தவரான தேவப்பெருமாளுக்கு மங்களம்- என்பது இந்த ச்லோகத்தின் கருத்து. *பொய்யிலாத மணவாளமாமுனிபுந்தியிலேபுகுந்த விஷயத்தில் அவிச்வாஸமுண்டாக ப்ரஸக்தியில்லை யென்று இவ்வளவோடு நிற்போமிப்போது ]

இப்படிப்பட்ட பெருமை வாய்ந்த நம்பிகளின் ஜ்ஞாதானுஷ்டானச் செல்வச் சிறப்பையும் பக்திவிரக்திகளின் விலக்ஷணபரிபாகத்தையும் கண்டு வியந்த எம்பெருமானார், தாம் இவருடைய திருவடிகளிற் பணிந்து உய்வு பெறவேணுமென்று பாரித்தார்; பலவாறு அநுவர்த்தித்தார். நம்பிகள் இதற்குச் சிறிதும் இசைவு காட்டவில்லை. *போனகஞ் செய்த சேடமாவது இவரிடத்தில் பெற்று வாழ்வோமென்று முயன்றார்; அதுவும் கைகூடவில்லை யென்பது சரித்திரமுணர்ந்தார்க்கு விசதம். பின்பு எவ்வாசிரியர் திருவடிகளில் ஆச்ரயிப்பதென்கிற விசாரம் ஸ்வாமிக்குப் பெரிதுமுண்டாயிற்று. அதை நம்பிகளிடத்தில் விண்ணப்பம் செய்து தேவப்பெருமாளுடைய திருவுள்ளத்தை அவர் மூலமாகத் தெரிந்து கொள்வோமென்று தோன்றி, அத்தோடு வேறு சில சாஸ்த்ரார்த்த விசிகித்ஸைகளையும் தீர்த்துக் கொள்ள விரும்பித் திருக்கச்சிநம்பிகள் பாடே விஜ்ஞாபித்துக் கொண்டார். "அடியேனுடைய உள்ளத்தில் சில ஜிஜ்ஞாஸைகள் இருக்கின்றன; தேவப்பெருமாள் மூலமாக தேவரீர் தெரிந்து க்ருபை செய்தருளவேணும்" என்று விண்ணப்பஞ் செய்தார். நம்பிகளும் அன்றிரவு தேவப்பெருமாளுடனே வார்த்தையாடுமளவில் ஸ்வாமியின் கோரிக்கையை விண்ணப்பம் செய்து பெருமாள் பக்கலிலே ஆறு வார்த்தைகள் பெற்று ஸ்வாமியிடத்தே வெளியிட்டதாக ப்ரஸித்தமான வார்த்தைகளை முன்னோர்கள் ஸங்க்ரஹித்தருளியுள்ளார்கள்; வடிவழகியநம்பிதாஸரென்கிற பரம பக்தரான தமிழ்க்கவியொருவர் தாமியற்றிய எம்பெருமானார் வைபவமென்னுஞ் செய்யுட் காவியத்தில் பணித்த இரண்டு செய்யுள்கள் சேளீர்;—

"செப்புகின்ற பரதத்வம் யானேயென்னச் செப்புதி.வே
றெப்பிலாதாய்! தரிசனமும் பேதமென்றே யுரைத்திடுக
தப்பிலாத வுபாயமதும் ப்ரபத்தியென்றே சாற்றிடுக
அப்ப!புகல்க விவையன்றி நினைவும்வேண்டா அந்திமத்தில்;

இந்தச்சரீர வவதானந்தன்னி லிசையும் மோக்கமது
அந்தமில்லாக் குணத்தினனுக் காசாரியனும் பெரியநம்பி
சிந்தைதன்னுளிவை யெல்லாஞ் சிந்தித்திருந்தானிளையாழ்வான்
முந்தியிவை நீமொழியென்று மொழிந்தருள்வா னருளாளன்".

இவ்விஷயத்தில் வடமொழி ச்லோகங்களுமிவைகாணீர்;—

* அஹமேவ பரம் தத்வம் தர்சநம் பேத ஏவ ச,
மோக்ஷோபாய: ப்ரபத்திஸ் ஸ்யாத் அந்திமஸ்ம்ருதிவர்ஜநம்,
தேஹாவஸாநே முக்திஸ் ஸ்யாத் பூர்ணாசார்ய ஸமாச்ரய:,
வார்த்தாஷட்கமிதம் லேபே காஞ்சீபூர்ணமுகாத் குரு:. *

இவ்வாறு வார்த்தைகளைத் திருக்கச்சிநம்பி மூலமாக ஸ்வாமி பெற்றது ஏக காலத்திலேயே என்பது ஒரு பக்ஷம்; அவ்வப்போதுகளில் தனித்தனியே பெற்ற வார்த்தைகள் ஒன்று சேர்த்து ஆறு வார்த்தைகளாக அநுஸந்திக்கப்பட்டு வருகின்றன வென்பது மற்றொரு பக்ஷம்.

இது எங்ஙனேயாயினுமாகுக, இவ்வாறு வார்த்தைகளில் தேறுகின்ற அர்த்தங்கள் ஸகல சாஸ்த்ரார்த்ததத்வங்களையும் கையிலங்கு நெல்லிக் கனியாக வுணர்ந்திருக்கும் எம்பெருமானார்க்குத் தெரியாதனவையோ? நன்கு தெரிந்திருக்கக் கூடிய அர்த்தங்களேயன்றோ இவை; இவற்றை இந்த முகமாகப் பெற வேண்டிய அவச்ய மென்ன? என்று சிலர் கேட்பது நேர்மையன்று. தெரிந்த அர்த்தங்களாயிருந்தாலும் அவற்றை நிஸ்ஸந்தேஹமாக த்ருடப்படுத்திக் கொள்ளுதல் ப்ராப்தமன்றோ. (1) ஸ்ரீமந் நாராயணனே பரதத்வமென்றும், (2) ஸம்ஸார தசையோடு முக்தி தசையோடுவாசியற எங்கும் ஜீவபரபேதம் பாரமார்த்திகமென்றும், (3) கர்மஜ்ஞான பக்தியோகங்களன்றிக்கே சரணாகதியே ஸ்வரூபாநுரூபமான உபாயமென்றும், (4) பகவத் விஷயமான அந்திமஸ்ம்ருதி இருந்தே தீரவேணு மென்கிற நிர்ப்பந்தம் உபாஸகர்களுக்கே யல்லது ப்ரபந்நர்களின் விஷயத்தில் அந்த நிர்ப்பந்தமில்லை யென்றும், (5) ஸஞ்சித கருமங்கள் கனத்திருந்தாலும் ப்ராரப்தகர்மாநுபவத்தை இந்த தேஹத்தோடே முடித்திட்டு அவ்வளவிலே மோக்ஷப்ரதானமென்றும், (6) பெரியநம்பி திருவடிகளிலே யாச்ரயித்துத் திருவிலச்சினைபெறுவதென்றும் ஆக இவ்வாறு வார்த்தைகள் உணரத்தக்கன. இவ்வாறு வார்த்தைகளுக்கு விபுலமான விவரணம் செய்திருக்கிறோம்.

ஆண்டாள், திருப்பாவையில் பாசுரந்தோறும் எம்பெருமானுருடைய பெருமையை [ஸ்வாபதேசார்த்தமர்யாதையில்] வெளியிடுவதுண்டே; அதில் *வையத்து வாழ்வீர்காள்!* என்கிற இரண்டாம்பாட்டின் ஈற்றடி *உய்யுமாறெண்ணி உகந்தேலோரெம்பாவாய்* என்பது. இங்கு, உய்யும் ஆறு எண்ணி—உஜ்ஜீவநமான ஆறு வார்த்தைகளைச் சிந்தித்து உகந்தமை கூறினதாக ரஹஸ்யார்த்த மறியத்தக்கது.

## அருளிச் செயலநுபவப் பகுதி

திருவாய்மொழியில் ஒவ்வொரு பதிகத்திலும் எம்பெருமானுடைய ஒவ்வொரு திருக்குணத்தை அநுபவித்து வெளியிட்டுவருகிற முறைமையில் இந்தப்பதிகத்தில் 'ஆராதனைக்கெளியன்' என்கிற ஒரு திருக்குணத்தை வெளியிட்டருள்கிறார். இக்குணம் வடமொழியில் 'ஸ்வாராதத்வம்' எனப்படும். சிரமமின்றி எளிதாகவே ஆராதிக்க உரியனாயிருக்குந்தன்மை என்றவாறு. இதர தெய்வங்களிற் காட்டில் எம்பெருமான் எத்தனையோ விதங்களால் நெடுவாசி பெற்றிருப்பதுபோலே இவ்வகையாலும் நெடுவாசிபெற்றிருப்பன். 'ஆடு பலிகொடு, கோழி பலிகொடு' என்று அருந்தேவைகளை யிட்டு மஹா பரிச்ரம ஸாத்யங்களான ஆராதனைகளை அபேக்ஷித்திருக்கும் தேவதாந்தரங்கள். எம்பெருமான்படியோ அப்படியன்று; நாம் இட்டது கொண்டு த்ருப்தியடைவதே அவனது ஸ்வரூபம் என்பது சாஸ்த்ரங்களில் தேர்ந்த விஷயம். அதுவே இத்திருவாய்மொழிக்கு ப்ரமேயம். கீழ்த்திருவாய்மொழியிலே நைச்சியத்தைச் சிந்தித்து அகன்ற ஆழ்வாரை எம்பெருமான் பொருந்தவிட்டுக் கொண்டது சீலகுணத்தாலெனப்பட்டது; அவன் சீலவானாயிருந்தாலும் அவனை ஆராதிக்கப் புகுமிடத்தில் குறைவில்லாமல் ஆராதித்துத் தீரவேண்டுமே; நாமோ க்ஷுத்ரர்களும் க்ஷுத்ரமான உபகரணங்களையுடையவர்களுமா யிராநின்றோம்;

ஆனபின்பு எங்ஙனே அவனை ஆச்ரயித்து ஆராதித்துத் தலைக்கட்டுவது? என்கிற சங்கை அடுத்தபடியாக விளையக்கூடியதாதலால் அதனைப் பரிஹரித்துக்கொண்டு இந்தத் திருவாய்மொழி அவதரிக்கின்றதென்க. (பதிகத்தைத் திருவாய்மொழியென்பது ஸம்பிரதாயம்).

எம்பெருமானுக்கு நாம் சில வஸ்துக்களை இடுவதானது அவனுக்கு ஏற்கெனவேயில்லாதவொரு பூர்த்தியை உண்டாக்குவதற்காகவா? நாம் ஸத்தைபெறுவதற்காகவா? என்று ஆராய வேண்டும்; அவனோ அவாப்தஸமஸ்தகாமன்; அன்னவன் நாமிட்டதுகொண்டு பூர்த்தியடைகிறானென்பது அஸம்பாவிதம். கடலிலே மேகம் வர்ஷிப்பது கடல் நிரம்புவதற்காகவன்றே; "வர்ஷபிந்தோரிவாப்தௌ ஸம்பந்தாத் ஸ்வாத்மலாப:" என்று (ஸ்ரீரங்கராஜஸ்தவத்தில்)—பட்டர் அருளிச்செய்தபடியே, தான் ஸத்தைபெறுதற்காகவே மேகம் கடலிலும் வர்ஷிக்கின்றதென்பது பரமார்த்தம். அதுபோலவே ஸ்வத: பரிபூர்ணனான பரமபுருஷன் திறத்திலே நாம் சில பொருள்களை ஸமர்ப்பிப்பது நமது ஸ்வரூபம் நிறம்பெறுதற்கேயன்றி, அவனை நிரப்புவதற்கன்று என்பது வெளிப்படை. ஆகவே, நாம் சிறந்த பெரும் பொருள்களைத் தேடி ஆராதிக்கவேணுமென்பதில்லை; இடுகிறபொருள் எதுவாயினும், இடுவது ப்ரேமபூர்வகமாக வேணுமென்பதொன்றிலேயே நியதியுள்ளது. *மாறன் பணித்த தமிழ்மறைக்கு ஆறங்கங்கூற அவதரித்த திருமங்கையாழ்வாரும் "கள்ளார் துழாயும் கணவலரும் கூவிளையும், முள்ளார்முளரியும் ஆம்பலும் முன்கண்டக்கால், புள்ளாயோரேனமாய்ப் புக்கிடந்தான் பொன்னடிக்கென்று, உள்ளாதாருள்ளத்தை உள்ளமாக் கொள்ளோமே" என்றருளிச் செய்கிறார். திருத்துழாய் முதலிய எந்த வஸ்துவைக் கண்டாலும் 'இது எம்பெருமானுக்குச் சாத்தத்தக்கது' என்று அத்யவஸாயங்கொள்ளாதாருடைய நெஞ்சைநெஞ்சாகக் கொள்ளமாட்டோமென்றுரைக்கின்ற இப்பாட்டில், எம்பெருமானுக்கே உரித்தான திருத்துழாயோடு விஜாதீய வஸ்துக்களுங் கூட்டியெடுக்கப்பட்டிருத்தலால், எம்பெருமானுக்கு ஸமர்ப்பிக்கவேணுமென்கிற சுத்தபாவத்துடனே கொள்ளுகிற புஷ்பம் எதுவாயிருந்தாலும் குற்றமில்லை; 'செண்பகமல்லிகையோடு செங்கழுநீரிருவாட்சி' என்று சிறப்பித்துச் சொல்லப்படுகிற புஷ்பங்களாகவேயிருக்கவேணுமென்ற நியதியில்லை; ஏதேனுமொரு பூவாயிருக்கலாமென்பதும் பக்திப்பெருங்காதலே முக்கியமானது என்பதும் தோற்றுவிக்கப்படும்.

ஸ்ரீஜகந்நாதத்தி லெம்பெருமான் செண்பகப்பூவை உகந்து சாத்திக்கொள்வது வழக்கமாதலால் முற்காலத்தில் சில ராஜகுமாரர்கள் அப்பெருமானுக்குச் செண்பகப்பூ ஸம்பாதித்து ஸமர்ப்பிக்கவேணுமென்று கடைவீதியேறச் சென்றனர் அங்குப் பூவெல்லாம் விற்றுப்போய் ஒரே ஒரு பூ மாத்திரம் மிகுந்திருந்தது. விலைக்கு வாங்கவந்த ராஜகுமாரர்கள் செல்வச்செருக்குடையவராதலால் ஒவ்வொருவரும் இப்பூவை நாமே பெற்றுப்போய் ஸமர்ப்பிக்கவேணுமென்கிற ஆவல்கொண்டவராகி மேன்மேலும் விலையை யேற்றிக்கொண்டே வந்தார்கள். கடைசியாக அளவற்ற விலைகொடுத்து ஒரு ராஜபுத்திரன் அதை வாங்கிப் பெருமாளுக்குச்சாத்த அன்றிரா அவனுடைய கனவிலே எம்பெருமான் காட்சிதந்து 'நீ இட்ட பூ எனக்குக் கனத்துச் சுமக்கவொண்ணாததாயிருக்கின்றது' என்றருளிச்செய்தான்—என்ற இதிஹாஸமும் அப்பாசுரத்தின் வியாக்கியானத்தில் பெரியவாச்சான் பிள்ளையால்

அருளிச்செய்யப்பட்டுள்ளது. இதனால், ஸ்நேஹபூர்வகமாகப் பூவிட்டால் அதுவே எம்பெருமானுக்கு அலப்யலாபமாயிருக்கு மென்றதாகும். இது புஷ்பவிஷயமொன்றில் மாத்திரமன்று; நாம் பகவானுக்கு இடுவது எதுவானாலும் அஃதெல்லாவற்றிற்குமே இந்த நியாயம் ஒக்கும்.

கீதாசார்யனும், "பத்ரம் புஷ்பம் பலம் தோயம் யோ மே பக்த்யா ப்ரயச்சதி, ததஹம் பக்த்யுபஹ்ருதமச்நாமி ப்ரயதாத்மந:" என்றருளிச்செய்கிறான். இடுகிற பொருளில் வாசி பார்ப்பதில்லை, இடுகிறவன் நெஞ்சில் ஈரமுள்ளதா என்பதொன்றையே பார்ப்பேன் என்றன்றோ இதிற்சொல்லுவது. "அந்யத் பூர்ணதபாம் கும்பாத் அந்யத் பாதாவநேஜநாத், அந்யத் குசலஸம்ப்ரச்நாத் ந சேச்சதி ஜநார்த்தந:" என்றும் "யா: க்ரியாஸ் ஸம்ப்ரயுக்தாஸ் ஸ்யு: ஏகாந்தகதபுத்திபி:, தாஸ் ஸர்வா: சிரஸா தேவ: ப்ரதிக்ருஹ்ணாதி வை ஸ்வயம்" என்றுமுள்ள ப்ரமாண சதங்களாலும் எம்பெருமான் ஆராதனைக் கெளியனென்பது விசதீகரிக்கப்பட்டுள்ளது. அந்தத் திருக்குணத்தையே இத்திருவாய்மொழியில் ஆழ்வார் அநுபவித்து வெளியிட்டருள்கிறார்.

***பரிவதிலீசனைப்பாடி விரிவதுமேவலுறுவீர்***
***பிரிவகையின்றிநன்னீர்தூய் புரிவதுவும்புகைபூவே.***

(பாசுரத்தின் கருத்து) துக்கமற்ற ஸர்வேச்வரனைத் துதிசெய்து ஸ்வரூபவிகாஸத்தைப் பெறவேணுமென்கிற உறுதியுடையவர்களே!, பிரயோஜனமேதேனுங் கொண்டு விலகிப் போதலின்றியே நல்ல தீர்த்தத்தை ஸமர்ப்பித்து அதன்பிறகு ஸமர்ப்பிப்பது—ஏதேனுமொரு தூபமும் ஏதேனுமொரு புஷ்பமுமேயாகும்.

எம்பெருமானை ஆராதிக்கு முபகரணங்களின் ஸௌகர்யம் இப்பாசுரத்தில் அருளிச்செய்யப்படுகிறது. எம்பெருமானைப்பற்றிச் சொல்லுகின்ற சாஸ்த்ரங்கள் அவனை 'அகிலஹேய ப்ரத்யநீகன்' என்கின்றன; ஹேயகுணங்களெல்லாவற்றிற்கும் அவன் எதிர்த்தட்டானவன் என்றபடி. அவனிடத்திலுள்ளவை யெல்லாம் கல்யாண குணங்களேயன்றி ஒருவகையான ஹேயகுணமும் இல்லாமையால் அங்ஙனஞ் சொல்லுகிறது. அந்த ஹேய ப்ரதிபடத்வமே இங்குப் '**பரிவதில்**' என்ற விசேஷணத்தினால் கூறப்படுகின்றது. துக்கமில்லாதவன் என்றது, மற்றுமுள்ள ஹேய குணங்களொன்றுமில்லாமையைச் சொன்னபடிக்கு உபலக்ஷணம். எம்பெருமானுக்கு துக்கமில்லையென்று சொல்லிவிட முடியுமோ? விபவாவதாரங்களிலே ஸீதா வியோகம் முதலான நிமித்தங்களினால் வாசாமகோசரமாகத் துயருற்றமை இதிஹாஸபுராணங்களில் ஸித்தமாயிருக்கின்றதே; துக்கமில்லாதவனென்று எங்ஙனஞ் சொல்லலாம்? என்று சிலர் சங்கிக்கக்கூடும்; அவதாரங்களில் உண்மையான துக்கமில்லை; அது அபிநய மாத்திரமே யென்பது ச்ருதப்ரகாசிகை முதலியவற்றில் நிர்ணயிக்கப்பட்டிருத்தலால் இந்த சங்கைக்கு இடமில்லை. ஸீதா வியோகாதி நிமித்தங்களினாலுண்டாகின்ற துக்கம் அபிநயரூபமென்று சொல்லிவிட்டாலும், எம்பெருமானை '**தயாளு**' என்றிசையும் போது, "தயையாவது—பிறர்படும் துக்கத்தைக் கண்டு தானும் துக்கப்படுகை" என்று ஆசிரியர்களால் நிர்வஹிக்கப்படுவதால், இந்த துக்கத்தையும் அபிநயரூபமென்று அங்கீகரிக்க வொண்ணாதே; இதற்கு எங்ஙனே ஸமாதானமென்று சிலர் சங்கிப்பதுண்டு; 'இது ஹேயப்ரத்யநீகத்வத்திற்கு

விரோதியன்று' என்பதே சுருக்கமான ஸமாதானம். துக்க ஸாமாந்யமும் ஹேயமன்று; ஸ்வார்த்தமாகப்படும் துக்கமே ஹேயமாகும்; பிறர்படும் இழவைக்கண்டு தரித்திருக்கமுடியாமல் பரவசமாகப் படுகின்ற துக்கம் ஹேயமன்று, மிகவும் உபாதேயமாகவேயாகும்.

இதனைச் சிறிது விவரிப்போம்;—பிறர்படுகின்ற துக்கத்தைக்கண்டு துக்கப்படுவதென்பது குணமா? தோஷமா? என்று விமர்சிக்கவேணும். ஸ்ரீராமாயண, அயோத்யாகாண்டத்தில் ஸ்ரீராமபிரானுடைய திருக்கல்யாணகுணங்களைச் சொல்லிக்கொண்டு வரும் பிரகரணத்தில் *வ்யஸநேஷு மநுஷ்யாணாம் ப்ருசம் பவதி து:க்கித:* (பிரஜைகள் துக்கப்படுங் காலங்களில் ஸ்ரீராமன் மிகவும் துக்கப்படுகிறான்) என்று சொல்லப்பட்டிருப்பது ஒருபுறம் நிற்க, உலகத்தில் ஒருவன் துக்கப்படும்போது அந்த துக்கத்தைக் கண்டுகொண்டிரா நின்ற மற்றொருவன் தானும் துக்கப்படாமல் வாளாகிடந்தால் அவனைக் கல் நெஞ்சனென்றும் ஈரநெஞ்சு இளநெஞ்சு இல்லாதவனென்றும் வசை கூறுவதும், பிறர் துக்கிப்பதைக்கண்டு பரவசமாக ஒருவன் துக்கிப்பானாகில் அவனை ஈரநெஞ்சனென்றும் இரக்கமுள்ளவனென்றும் பரம தயாளுவென்றும் சொல்லிப் புகழ்வதும் இன்றாக ஒருவராலும் அபலாபஞ் செய்யவொண்ணாதவை. ஆகவே பரது:க்கது:க்கித்வ மென்பது சிறந்த குணங்களில் முதன்மையாகக் கணக்கிடக்கூடியதேயன்றி துர்க்குணமாக ஒருவராலுங் கூறவொண்ணாதது. இப்படிப்பட்ட வொரு சிறந்த குணம் எம்பெருமானுக்கு இல்லையென்று எங்ஙனே சொல்லலாகும்? ஆனால் இங்கு ஒன்று சொல்லலாம்; பிறர் படும் துயரத்தைப் பரிஹரிக்கக்கூடிய சக்தி நமக்கில்லாமையாலே நாம் அத்துயரத்தைக்கண்டு துயரப்படலாம்; பரிபூர்ண சக்தியுக்தனான எம்பெருமான் எளியெனும்பரான நம்மைப்போலன்றியே பிறருடைய துயரத்தைக்கண்டு தானும் துயரப்படக் காரணமேயில்லை—என்னலாம்; இங்குக் குறிக்கொள்ள வேண்டியதாவது—பிறர் படும் துயரத்தைக்கண்டு துயருறுகை என்கிற ஒரு தன்மையும், பிறர்படுந் துயரத்தை நீக்கவல்ல சக்தியுடைமையென்கிற வொரு தன்மையும் பரஸ்பர விருத்தமென்று நினைக்கலாகாது; உண்மையில் இவை ஒன்றோடொன்று விரோதமுடையனவல்ல; தன் குழந்தைக்கு ஒரு துன்பம் நேர்ந்துவிட்டால் அதனை உடனே பரிஹரிக்கவல்ல சக்தி மாதாவுக்கு இருக்கச்செய்தேயும் அப்படியே அத் துன்பத்தை அவள் பரிஹரித்துவிடச் செய்தேயும் 'குழந்தைக்குத் துன்பம் நேராமல் காக்கவேண்டியது நமது கடமையாயிருந்தும் ஏமாந்து போனேமே!, அந்தோ! அநியாயமாய்க் குழந்தையைத் துடிக்கவிட்டோமே!, என்று பல வாறாகக் கதறி வருந்தும்படியைக் காணாதாருண்டோ?

துச்சாஸநன் கையிலே த்ரௌபதி பரிபவப்பட்டுக் கூவினபோது கண்ணபிரான் ஒருவாறு அவளது துயரைத் தீர்த்திருக்கச் செய்தேயும் 'ஐயோ அவள் கூவினபோது நான் நேரில் சென்றிருந்து உதவாதொழிந்தேனே!, ஐயோ! அவளுக்குப் பரிபவம் நேர்ந்து அவள் கதறினபின்பு நான் அதைப் போக்கினேனேயன்றி, முதல் தன்னிலே பரிபவமே உண்டாகாதபடி ஜாகரூகனாயிருக்கை தவிர்ந்தேனே! அவளுக்கு நான் பெரிய கடனாளியாய்விட்டேனே! என் பிறப்பு என்னாயிற்று!' என்று தன் காவற் சோர்வை நினைத்துத் திருவுள்ளம் வேவுண்டு பலவாறு கதறினபடியுண்டே, இது விஷயமாக ஆசாரியர்கள் அருளிச்செய்த ஸ்ரீஸூக்திகள் காண்மின்;-

"த்ரௌபதி சரணமென்ற உக்தியித்தனையும் திருவுள்ளத்திலே கிடந்து, ஸதஸ்ஸில் அவன் பரிபவித்த பரிபவததையும் பரிஹரித்து துர்யோதநாதிகளை யும் நிரஸித்து தர்மபுத்ரன் தலையிலே முடியையும் வைத்து இவள் குழலையும் முடிப்பித்துப் பின்பும் *கோவிந்தேதி யதாக்ரந்தத் க்ருஷ்ணா மாம் தூரவாஸி நம், ருணம் ப்ரவ்ருத்தமிவ மே ஹ்ருதயாத் நாபஸர்ப்பதி* என்று குறைவாள னாய், பரமபதத்துக்கு எழுந்தருளுகிறபோதும் * நாதிஸ்வஸ்த்தமநா யயௌ * என்னும்படி திருவுள்ளத்தில் புண்ணோடேயிறே எழுந்தருளிற்று". இத்யாதி.

மடுவின் கரையிலே முதலைதன்னாலடர்ப்புண்ட ஸ்ரீ கஜேந்திராழ்வானுடைய இடரை எம்பெருமான் தீர்த்தருளினானேலும் அவன்றான் பட்ட பரிதாபம் பேச்சுக்கு நிலமன்றே. "ஸ்ரக்பூஷாம்பரமயதாயசம் ததாநோ திங்மாமித்யநுகஜகர்ஜமா ஜகந்த" என்று ஸ்ரீரங்கராஜஸ்தவத்திலே பட்டர் அருளிச்செய்தமை கண்டீரே. கெட்டேன்! கெட்டேன்!! என்று நொந்துகொண்டே எம்பெருமான் அரைகுலையத் தலைகுலைய ஓடிவந்தானென்றால் இக்குணத்தையநுபவிக்கபாக்யமில்லையே!சிலர்க்கு

ஸஹஸ்ரநாமத்தில் 'தக்ஷ:' என்னுந் திருநாமத்தின் பாஷ்யத்திலும் இதனை விளக்கியருளினார் பட்டர். ஆழ்வானும் ஸ்ரீவைகுண்டஸ்தவத்தில்' *விச்வம் தியைவ விரசய்ய நிசாய்ய பூய: ஸஞ்ஜஹ்ருஷஸ் ஸதி ஸமாச்ரிதவத்ஸலத்வே, ஆஜக்முஷஸ் தவ கஜோத்தம ப்ருப்ஹிதேந பாதம் பராமப்ருசுஷோபி ச கா மநீஷா?" என்றருளிச்செய்தார். எம்பெருமான் தான் சாத்தியருளின திருப்பரிவட்டத் தலைப் பைச் சுருட்டித் திருப்பவளத்திலே வைத்து ஊதி கஜேந்திராழ்வானுடைய புண் வாயை வெதுகொண்டு திருக்கையாலே குளிரத் தடவிக்கொடுத்தானென்றால் அந்த ஸமயத்திலே எம்பெருமான் திருவுள்ளத்திற் கொதிப்பு வாசாமகோசர மன்றோ? ஆதலால் இப்படிப்பட்டவனைப் பரிவதிலீசன் என்றது ஹேயமான துக்க மில்லாதவன் என்றபடியாமத்தனையென்று தலைக்கட்டிற்றாயிற்று. [இனி, பாசு ரத்தின் மேற்பகுதியை விவரிப்போம்.

ஈசனை = நமக்கென்று ஏற்பட்ட ஸ்வாமியை என்றபடி உலகத்தில் ஒருவ னுக்கு ஒருவன் விருந்திடும்போது நெடுநாளாக ஒரு நல்லபொருளைச் சேகரித்து விருந்திட்டால் 'இதை இவன் ஸ்வீகரித்து என்ன குறை சொல்லப்போகிறானோ' என்று நெஞ்சு தளும்பியிருக்க வேண்டிவரும். புத்திரன் பிதாவுக்கு விருந்திட்டால் விருந்தில் ஏதேனுங் குறையிருந்தாலும் அது தகப்பனுடையதாய் நெஞ்சாறல்பட வேண்டாதிருக்குமன்றோ; அப்படிப்பட்ட ஸம்பந்தம் எம்பெருமானுக்கும் நமக்கு முண்டென்று காட்டினபடி. பாடி = பெரியவர்களின் ஸந்நிதானத்திலே வாயைத் திறவாமல் மௌனமாயிருக்க ப்ராப்தமாயினும், ஆனந்தம் உள்ளடங்கி யிருக்க மாட்டாமல் வாய்விட்டுப்பாட நேர்ந்துவிடுமென்க பரமபதத்திலே *ஏதத் ஸாம காயந்நாஸ்தே* என்று சொல்லப்பட்ட பாடுதல் இங்கே விவக்ஷிதம் [பாடி விரிவது மேவலுறுவீர்.] இந்த ஸம்ஸார நிலத்திலிருக்கும் வரையில் சேற்றிலழுந்தின மாணிக் கம் ஒளி சுருங்கியிருக்குமாபோலே ஆத்மாவுக்கும் ஞானநந்தாதிகள் விரிவின்றிச் சுருங்கியிருக்கநேருமே; அந்தச்சுருங்குதல் தொலைந்து ஸ்வரூப விகாஸத்தைப் பெற வேண்டி யிருப்பவர்களே! என்று முமுக்ஷுக்களை விளித்தபடி, அப்படிப்பட்ட

கனத்தபேறு பெறுதற்குச் செய்யவேண்டுவதென்னென்ன; க்ஷுத்ரபலன்களைப் பெற்று அவனைவிட்டுப் பிரிந்துபோவதல்லாமல், ஏதேனும் தீர்த்தத்தை ஸமர்ப்பித்து ஏதேனுமொரு பூவையிட்டு ஏதேனுமொரு புகையைக்காட்டினாலும் போதுமென்றார் பின்னடிகளில்.

இப்பாசுரத்தைப் பட்டர் உபந்யஸிக்கும்போது "புரிவதுவும் புகை பூவே" என்ற சப்தஸ்வாரஸ்யத்தைத் திருவுள்ளம்பற்றி "இவ்விடத்தில் அகில்புகை யென்றாவது கருமுகைப்பூ என்றாவது சிறப்பித்துச் சொல்லாமையாலே ஏதேனும் ஒரு புகையும் ஏதேனும் ஒரு பூவும் எம்பெருமானுக்கு அமையும்; செதுகையிட்டுப் புகைக்கலாம், கண்டகாலிப்பூவுஞ் சூட்டலாம்" என்று உபந்யஸித்தாராம். அதை நஞ்சீயர்கேட்டு "ந கண்டகாரிகாபுஷ்பம் தேவாய விநிவேதயேத்" [கண்டகாலிப்பூவை எம்பெருமானுக்குச் சாத்தலாகாது] என்று சாஸ்த்ரம் மறுத்திருக்க, இப்படி அருளிச்செய்யலாமோ' என்று கேட்டார்; அதற்கு பட்டர் அருளிச்செய்த ரஸோக்தி :— "சாஸ்த்ரம் மறுத்தது மெய்தான்; கண்டகாலிப்பூ எம்பெருமானுக்கு ஆகாதென்று மறுத்தபடியன்று; அடியார்கள் அப்பூவைப் பறித்தால் கையில் முள் பாயுமே என்று பக்தர்கள் பக்கலில் தயையினால் சாஸ்த்ரம் நிஷேதித்ததேயன்றி எம்பெருமானுக்கு ஆகாத பூ எதுவுமில்லை" என்றும். இதர ஸம்பிரதாயத்திலுள்ள வியாக்யாதாக்கள் சிலர் இந்த ஸம்வாதத்தைக்கண்டு ரஸியாமல் திரஸ்கரித்துரைத்திருப்பதில் விவேகிகட்குக் கண் செல்லாது. இங்கு அருளிச்செயல் தொடையழகை நோக்கி ரஸப் பொருளுரைத்த விதில் குதர்க்கவாதஞ் செய்கை மனக்குற்ற மாந்தர்க்குரியதே.

**பிரிவகையின்றி** = இதற்கு இரண்டு வகையாகப் பொருள் கொள்ளலாம்; ஐச்வர்யம் ஸந்தானம் கைவல்யம் முதலான அற்ப பலன்களைக்கேட்டுப் பெற்றுக் கொண்டு அவனைவிட்டுப் பிரிந்து போய்விடாமல் என்பது ஒருவகை. (கீழ்த்திருமொழியிற்போலே) நைச்யாநுஸந்தானம் பண்ணி அகன்றுபோய்விடப் பாராமல் என்பது மற்றொரு வகை. (கீழ்த்திருவாய்மொழியாவது—*வளவேழுலகு பதிகம்.)

**நன்னீர்** = நல்ல நீர் என்றது சுத்த ஜலம் என்றபடியாய், 'சுத்த கங்கை; என்றால் யமுனை ஸரஸ்வதி முதலிய இதர நதிகள் கலசாத வெறும் கங்கை என்று பொருளாவதுபோல ஏலம் லவங்கம் முதலிய இதர பரிமளவஸ்துக்கள் சேராத வெறும் தீர்த்தம் என்றவாறும்; இதனால் ஆராதனைக்கெளிமைதோற்றும். ... *

## திருமங்கையாழ்வார் ஸ்ரீஸூக்தியொன்று

வடமொழி மரியாதையும் தென்மொழி மரியாதையும் சில விஷயங்களில் ஒத்திருக்கும், பல விஷயங்களில் ஒவ்வாமலிருக்கும். வடமொழியில் ஒரு சொல்லுக்குப் பல பொருள்கள் இருப்பது போலவே தென் மொழியிலுமுண்டு. வடமொழியில் ஹரி: என்கிற ஒரு சொல்லை யெடுத்துக் கொண்டோமானால் இதற்கு, விஷ்ணு, ஸூரியன், குதிரை, தவளை முதலிய பலபொருள்கள் நிகண்டுகளில் கூறப்பட்டிருக்கக் காண்கிறோம். விஷ்ணுவை உத்தேசித்தே ஹரி: என்னுமிந்தச் சொல்லைப் பெரும்பாலும் பிரயோகித்து வருகிறார்களெனினும் ஏனைய பொருள்களை உத்தேசித்தும் இந்தச்சொல்லைப் பிரயோகிப்பதில் தவறில்லை, அங்ஙனே பிரயோகங்களும் பலவுள்ளன விஷ்ணுவாசகமாக இதைப்

பிரயோகிக்குங் காலத்தில் விஷ்ணுவினிடத்தில் அந்வயிக்கக் கூடிய விசேஷணங்களைப் பிரயோகிப்பர்கள்—"பீதாம்பராய ஹரயே கரவை நாமாம்ஸி" என்றொரு ச்லோகத்தை எடுத்துக்கொள்வோம். இதில் ஹரிக்குப் பீதாம்பரத்வம் விசேஷணமாயிருக்கின்றது. பீதகவாடை யணிந்து கொண்டுள்ளவர் என்பது பொருள். இந்த விசேஷண ஸாமர்த்தியத்தினாலும் நாம் ஹரிசப்தார்த்தத்தை இங்கு நிச்சயித்துக் கொள்ள விரகுண்டு.

ஹரி பதத்திற்கு தவளையென்கிற பொருளும் உண்டாகையாலே அப்பொருளை விவக்ஷித்து ஹரிபதம் பிரயோகிக்குமிடத்து பீதாம்பரத்வ விசேஷணம் செய்யக்கூடுமா? என்றால் கூடாது என்பதே அறுதியிடப்பட்டிருக்கிறது. தமிழில் இப்படியில்லை. அந்த பாஷையில் ஒரு சொல்லுக்கு இரண்டு பொருள் இருந்தால் ஒருபொருளுக்கு இசையும் அடைமொழியை [விசேஷணத்தை] மற்றொரு பொருளுக்கும் உபயோகிப்பதுண்டு. இதற்குச் சில உதாரணங்கள் காட்டியே ஸஹ்ருதயர்களின் நெஞ்சில் இதைப்பதியவைக்கவேண்டியிருக்கிறது.

வஞ்சி என்கிற வொரு சொல்லை எடுத்துக்கொள்வோம். இதற்கு வஞ்சி மரம் என்கிற வொரு வ்ருக்ஷவிசேஷமும் அர்த்தம், சேரனுடைய ராஜதானியாகிய வஞ்சிமாநகரும் அர்த்தம். வஞ்சிமரத்தைக் கூற வேண்டுங்கால் உபயோகப்படுத்தக்கூடிய இலை, காய், கொடி முதலியன வுடைமையைத் தெரிவிக்கும் அடைமொழிகள் வஞ்சிமாநகரைக் கூறுங்கால் உபயோகப் படாவாயினும் கவிகள் பிரயோகத்தில் உபயோகிப்பதுண்டு. பரிபாடல் என்னும் சிறந்த தமிழ் நூலில் பன்னிரண்டாம் பாட்டினுரையில் பரிமேலழகர் என்கிற பெரியார் "நெட்டிலை வஞ்சிக்கோ" என்பதை எடுத்துக் காட்டியுள்ளார். புறநானூறு என்னும் நூலில் (செய்யுள்—387) "புல்லிலை வஞ்சிப் புறமதிலலைக்கும் கல்லென் பொருநை" என்றுள்ளது. இவ்விடங்களில் வஞ்சிமாநகர் விவக்ஷிதமேயல்லது வஞ்சிமரம் விவக்ஷிதமேயன்று. ஆயினும், வ்ருக்ஷவிசேஷப் பொருட்கு உரிய நெட்டிலை, புல்லிலை என்னும் அடைமொழிகளை அம்மரப் பெயர் கொண்ட வஞ்சி மாநகர்க்கும் ஏற்றியுள்ளார்கள் என்பது நன்கு காணக்கிடக்கின்றது. நாகம் என்னுஞ் சொல் புன்னைமரத்திற்கும் பாம்புக்கும் பெயர், பரிபாடலில் நாகமென்ற சொல்லையிட்டுப் புன்னைமரத்தைப் பேசுங்கால் பாம்புக்கு உரிய அடைமொழியைப் புன்னைக்கு இட்டனர் "ஒளி திகழ் உத்தி உருக்கெழு நாகம்" என்ற பன்னிரண்டாஞ் செய்யுள் காண்க.

இங்ஙனே தமிழ்நூற்களிலுள்ள ஸம்பிரதாயம் ஆழ்வார்களது அருளிச் செயல்களிலும் ஏறியுள்ள தென்பதே இங்கு எடுத்துக்காட்ட விரும்பியது. திருமங்கையாழ்வாருடைய பெரிய திருமொழியில் (3-8-8) "துளையார் கருமென் குழலாச்சியர்" என்ற பாட்டில் குழலுக்குத் துளையார் என்னும் அடைமொழி கொடுக்கப் பட்டிருக்கிறது. இங்கே குழல் என்பதற்குக் கூந்தல் என்றே பொருள். குழல் புல்லாங்குழலுக்கும் வாசகமாயினும் அப்பொருள் இக்கு விவக்ஷிதமன்று. கூந்தல் என்னும் பொருள் விவக்ஷிதமானால் அதற்குத் 'துளையார்' என்ற விசேஷணம் எங்ஙனே பொருந்துமென்று பரிசீலிக்கவேணும். புல்லாங்குழலில் துளை ஆர்ந்திருப்பது ப்ரஸித்தம். ஆகவே, துளைகள்நிரம்பிய புல்லாங்குழலைச் சொல்லக் கடவதான

குழல் என்கிற சொல்லால் கூறப்படுகின்ற கூந்தலை யுடையவர்களான ஆய்ச்சிகள் என்றதாயிற்று. வேறுவகையாகப் பொருள் கூறலாமானாலும், இப்படியும் நிர்வஹிக்கிற புடையுண்டு என்றும், தமிழ் மரியாதையிலே இது விசேஷார்த்தமாகத் தெரிந்து கொள்ளத்தக்கதென்றும் இங்குக் காட்டி நின்றோம். ... ... *

# கண்ணபிரானும் ஆண்டாளும்

ஆண்டாள் பெரியாழ்வாரைப்போலே க்ருஷ்ணவதார சேஷ்டிதங்களை விரிவாக அநுபவித்திலளெனினும் இவளுடைய அநுபவம் அஸாதாரணம், மிகவற்புதம். திருப்பாவையிலநுபவம் ஸுப்ரஸித்தமானது. நாச்சியார் திருமொழியிலநுபவத்தைச் சிறிது புஜிப்போம் இத்திவ்வியப் பிரபந்தத்தில் *கோழியழைப்பதன் முன்னம்* என்கிற பதிகம், *மற்றிருந்தீர்சட்கு *கண்ணனென்னுங் கருந்தெய்வம் *பட்டிமேய்ந்தோர் காரேறு* என்னும் பதிகங்கள் ஆகிய இந்நான்கு பதிகங்கள் பேரின்பவெள்ளம் பெருகுவன. இவற்றை ஸாரமாக அநுபவிப்போமிங்கு.

மூன்றாம் பதிகத்தின் ப்ரமேயம். (கோழியழைப்பதன் முன்னம்.) கோபீவஸ்த்ராபஹார சேஷ்டிதங்கூறும் பதிகமிது. கோபிகள் கண்ணபிரானுடைய விரஹதாபம் ஆறுவதற்காகத் தண்ணீரிலே படிந்து குடைந்தாடநினைத்துப் பின்மாலை யெழுந்திருந்து யமுனையிலே ஒரு துறைக்குச் சென்றார்கள். கண்ணனும் அவர்களுடைய செய்தியை க்ஷணந்தோறும் ஆராய்ந்து அறிந்து கொண்டேயிருக்கிறானே; இங்ஙனமே யிவர்கள் ஒரு மடுவிலே குளிக்கப் போனார்களென்றறிந்தவாறே தான் தனியிருக்கமுடியாமல் ரஹஸ்யமாக அவ்வாய்ச்சிகளைப் பின்தொடர்ந்து சென்று அந்தத் துறைக்கே சென்று சேர்ந்து ஒரு மரத்தடியிலே மறைந்திருந்தான். ஆய்ச்சிகளும் வழக்கப்படி தங்கள் ஆடையாபரணங்களைக் கழற்றிக் கரையிலே வைத்திட்டுக் குளிப்பதிலே யூன்றியிருந்தார்கள். அப்போது கண்ணன் அவற்றை அவர்கறியாதபடி கொள்ளை கொண்டு அங்குள்ள வொரு குருந்த மரத்தின்மேலேறி அவற்றை யெல்லாம் தானே யணிந்துகொண்டு ஒரு கிளையிலே வீற்றிருந்தான். கோபிகள் குளித்தான பின்பு ஆடையாபரணங்களை வைத்தவிடத்திற்காணாமல் 'இவை எப்படி போயின! யாராலே கவரப்பட்டன;' என்று திசை தொறும் ஆராய்ந்து நோக்கி முடிவாகக் கிளையின்மீது கண்ணனைக் கண்டார்கள். ஆடையாபரணங்கள் அவனது அவயவங்களிலே விளங்குவதையுங் கண்டார்கள். அவற்றைப் பெற்றுக் கொண்டன்றோ இவர்கள் வெளியேறவேண்டும். அந்தோ என் செய்வார்கள்! நீரைவிட்டு வெளி வரமுடியாமல் நீரிலே நின்றயர்க்கவேண்டியதாயிற்று. நங்கைமார்க்கு நாணமன்றோ பெருஞ்செல்வமாகவுள்ளது. நீரிலேயே எத்தனை நாழிகை நின்று கொண்டிருக்க முடியும்? கயல்களும் வாளைகளும் விடத்தேளெறிந்தாற்போல் காலைக் கதுவுகின்றன; இவ்வாபத்தில் நின்றும் எங்ஙனம் தப்பிப் பிழைப்பதென்று அலமந்து நிற்கிறார்கள். படாதபாடுகளும் பட்டாவது ஆடையாபரணங்களை அவனிடமிருந்து பெற்றுத் தீரவேணுமே. எப்படியாவது அவனையே யிரந்து பெறுவோமென்று துணிந்து அவனை ஏத்துவதும் இறைஞ்சுவதும் பழிப்பதும் பிரார்த்திப்பதுமாக, கண்ணன் "ஆடை வேண்டுவார் கரைமேலேறிவந்து கைகூப்பித் தொழுது பெற்றுக் கொள்வது" என்று கூற,

தொடர்

### கீர்த்தி மூர்த்தியான ஸ்ரீமதுபயவே

# வி. வி. ஸ்ரீநிவாஸய்யங்கார் ஸ்வாமியின் நினைவு

### ந்ருஸிம்ஹப்ரியாவலோகன நிகமனம்

சென்னையில் பிரபல அட்வகேட்டாக விளங்கினவரும், சிலவாண்டுகள் ஹைகோர்ட் ஜட்ஜ் பதவியை வஹித்திருந்தவருமான ஸ்ரீ V.V. ஸ்ரீநிவாஸய்யங்கார் ஸ்வாமிகள் பரமபதித்து ஏறக்குறைய இருபது வருஷமானாலும் அவரை அடிக்கடி



ஸ்மரிப்பவர்கள் இற்றைக்கும் பலருளர். அன்னவர்களில் அடியேனுமொருவன் (தலைவனென்னலாம்.) விசாலஹ்ருதயம் படைத்த மஹான் அவர். இப்போது அஹோபிலமடத்துப் பத்திரிகையாக நடந்துவரும் ந்ருஸிம்ஹப்ரியா ஆரம்ப காலத்தில் வேதாந்த தீபிகையென்கிற பெயரோடு நெடுநாள் நடந்துவந்தது. அதற்கு அவ்வப்போது ஸம்பாதகர்களாக இருந்துவந்தவர்கள் பலர். மேலே ப்ரஸ்தாவித்த V. V. ஸ்ரீநிவாஸய்யங்கார் ஸ்வாமியும் சிலவாண்டுகளில் ஸம்பாதக பதவியை வஹித்துவந்தார். அவர் அடிக்கடி காஞ்சிக்கு எழுந்தருள்வது வழக்கமாதலால் ஒரு ஸமயம் அடியேனை நோக்கி ஸாதித்தார். "இப்போது வேதாந்த தீபிகையில் வாத விவாதப்பகுதியென்று ஒரு விபாகம் ஏற்படுத்தியிருக்கிறேன்; த்வைதாத்வைதாதி மதங்களிலும் ஸ்வஸம்பிரதாயத்திலும் பூர்வபக்ஷக்கட்டுரைகளை ஒருவர் தொடர்ச்சியாக எழுதிவரவேண்டியது, ஸமாதானக் கட்டுரைகளை மற்றொருவர் எழுதிவரவேண்டியது· என்று ஏற்பாடு செய்திருக்கிறேன். இதனால் அபூர்வமாக ஸித்தாந்த ஸ்தாபனமொன்றும் செய்துவிடப் போவதாக எண்ணமில்லை; அந்தந்த மதஸ்தர்கள் தம்தம் மதக்கோட்பாடுகளை மட்டும் தெரிந்துகொண்டிருக்கிறார்களேயல்லது புறமதக் கொள்கைகளையும் தெரிந்துகொண்டவர்கள் மிகச்சிலரே யுள்ளார்கள்; இப்போது நான் உத்தேசிக்கிற வழி நிறைவேறினால் மிகவும் நன்மையுண்டாகும்" என்று பலபலவும் ஸாதித்தார். யார்? ஸ்ரீமத் V.V. ஸ்ரீநிவாஸய்யங்கார். அவர் இதை மநோரதத்தோடு நிறுத்திவிடவில்லை. தாம் வேதாந்த தீபிகைக்கு ஸம்பாதகராக இருந்தவரையில் நாலைந்து வித்வான்களைக் கைக் கொண்டிருந்து, பத்ரிகைதோறும் வாதவிவாதப் பகுதியென்றிட்டு ஆக்ஷேபஸமாதானக் கட்டுரைகளை வெளியிடுவித்து வந்தார். நிந்தைகளையோ பரிஹாஸங்களையோ புகுத்தினதில்லை. ஆனாலும் பூர்வபக்ஷக் கட்டுரையென்று தலையங்கம் வைத்து எழுதும்போது அதிலுள்ள விஷயங்களைக் காணுமிடத்து, சிலர்க்கு வருத்தமுண்டாகக்கூடும். யார்க்கு? ஸமாதானம் சொல்லவோ எழுதவோ தெரியாதவர்

களுக்கு. உடனுக்குடனே ஸமாதானம் சொல்லவும் எழுதவும் திறமையுடையவர்கள் ஆக்ஷேபங்களை (அல்லது) பூர்வபக்ஷங்களை அன்போடு வரவேற்பர்கள். சிரித்துக் கொண்டே உல்லாஸமாக அவற்றை வாசிப்பர்கள்.

"மதி தௌர்பல்யாத் ந மத தௌர்பல்யம்" என்றொரு பழமொழி உண்டு. இதன் பொருள் என்னவென்றால், சிறந்த பண்டிதர்களால் நெடுநாளாக ப்ரவர்த்திப்பிக்கப்பட்டு வருகிற மதத்தின் மீது சிலர் பூர்வபக்ஷம் செய்ய, அதைக் கண்டித்துத் தம் மதத்தை ஸ்தாபித்துக்கொள்ள ஆற்றலற்றவர்களாயிருந்தால் அன்னவர்கள் 'மதி தௌர்பல்யாத் ந மததௌர்பல்யம் =எனக்கு ஸாமர்த்தியமில்லாமற் போனதனால் என் மதம் துர்பலமாய் விடாது; என்னைக் காட்டிலும் வியாபகர்களாயுள்ளவர்கள் தக்கஸமாதானங்கள் கூறியே தீருவர்கள்' என்பர்கள். ஸ்ரீ பாஷ்யத்தில் "லகுபூர்வபக்ஷ:" என்றும், "மஹாபூர்வபக்ஷ:" என்றும் இரண்டு ஸ்தலங்கள் வருவதை ஸ்ரீ பாஷ்யாதிகாரிகள் அறிவர்கள். சாஸ்த்ரஜ்ஞான ஸ்ரபிதமதிகளாயிருப்பார் உத்ஸாஹத்தோடும் ஆனந்தத்தோடும் அவ்விடங்களை ப்ரவசனம் செய்வார்கள். பூர்வபக்ஷப்ரஜ்ஞளிகளை உபபாதனம் பண்ண சக்தியற்றவர்களோ வென்னில் ப்ராசீநாவீதிகளாய்க் கொண்டு "பாபி ஏதோ உளறுகிறான், அதை அநுவதிப்பதும் பாபம்; ஏடுகளைத் தள்ளு; அல்லது உபாம்சுவாகப் பங்க்திகளை வாசித்துவிட்டு ஸித்தாந்த ஸூக்திகளை ஸேவி. என்பர்களாம். இது கீர்த்திமூர்த்தியான ஸ்ரீமுஷ்ணம் ஸ்வர்ணம் ஸ்வாமி ஸாதிக்கக் கேட்டது....ஆக இவ்வளவையும் மேல் விவக்ஷிதங்களுக்கு முன்னுரையாகக் கொண்மின். "விவக்ஷிதம் ஹி அநுக்தம் ஆகுலீகரோதி ஹ்ருதயம்" (காலிதாஸர்) ஆதலால் சில சொல்லித் தலைக்கட்டுகிறேன்.

இப்போதடியேன் சென்னை மாநகரில் திருப்பாவை ப்ரவசனத்தில் இருந்துவருகிறேனென்பதை அனைவருமறிவர். நாடோறும் மாலை ஆறு மணி முதலாக நடந்து வருகிறது. இக்கட்டுரையை 23-12-75ல் எழுதுகின்றேன். * புள்ளுஞ் சிலம்பினகாண் பாசுரத்தில் * வெள்ளத்தரவில் துயிலமர்ந்தவித்தினை * என்றவிடம் உபந்யஸிக்கப் படுகையில் ப்ராஸங்கிகமாகப் பெரியாழ்வாருடைய பாசுரம் (5-1-7.) * வெள்ளை வெள்ளத்தின் மேலொருபாம்பை மெத்தையாக விரித்ததன்மேலே, கள்ளநித்திரை கொள்கின்ற * இத்யாதியை ப்ரஸ்தாவிக்க நேர்ந்தது; அப்போது அருகே வீற்றிருந்த ஒரு அட்வகேட் சிரித்துக் கொண்டே "தேவரீர் கூட கள்ளநித்திரை கொள்கின்றதாமே" என்றார். அதைச் செவியுற்ற வேறு சிலரும் இது தங்களுக்கும் தெரியும் என்று காட்டுவார் போன்று புன்முறுவல் பூத்தனர். (இவர்களெல்லாரும் பெரிய மனிதர்கள்.) 'இது எனக்கு விளங்கவில்லையே!' என்றேன். பிறகு விஜ்ஞாபிக்கிறேனென்று சொல்லிவிட்டார். காலக்ஷேபம் முடிந்த பின்பு கூடவே உள்ளே வந்து, "நாலுநாள் முன் வெளிவந்த மார்கழிந்ருஸிம்ஹப்ரியாவில் (கள்ளநித்திரையைக் கலைக்க முடியுமா?) என்றொரு கட்டுரை ஸ்வாமியைக் குறித்துப் பிரசுரமாகியிருக்கிறதே, கடாக்ஷித்தருளவில்லையோ? என்றார். 'அப்பத்திரிகை இதுவரை எனக்குக் கிடைக்கவில்லை' என்றேன். நாளையனுப்புகிறேனென்று சொல்லிச் சென்றார் அவ்

படியே மறுதினம் அதனையனுப்பி வைத்தார். அப்போதே ந்ருஸிம்ஹப்ரியா காரியாலயத்திலிருந்தும் ஒரு பிரதி போஸ்டில் வந்தது. அதே சமயத்தில் ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனபத்ராதிப ஸ்வாமிஸன்னிதியிலிருந்தும் ஒரு ஸ்ரீமுகம்கிடைத்தது. அதில் எழுதியிருந்ததாவது—"நேற்று வந்த ந்ருஸிம்ஹப்ரியாவில் அடியேனை மத்யஸ்தனுகக் குறிப்பிட்டிருப்பதைக் கடாக்ஷித்திருக்கலாம்; அடியேன் அதுபற்றித் திருக்கள்ளம் ஸ்வாமிக்குக் கீழ்க்கண்டவாறு பதில் எழுதியுள்ளேன், ... அடியேன் ஸ்ரீதேசிகனுக்குப் பிற்பட்ட தேசிகஸம்ப்ரதாயக்ரந்தங்களில் அதிகமாகப் பரிசயமில்லாதவன். ஸ்ரீதேசிகக்ரந்தங்களிலும் ரஹஸ்யத்ரயஸாரம் முதலியவற்றை அடியேன் காலக்ஷேப முறையில் கேட்டவனல்லேன். ஆகையால் அடியேன் ப்ரக்ருதவிவாதத்தில் மத்யஸ்தனுயிருக்கத் தகுதியற்றவன் என்பதை விண்ணப்பித்துக்கொள்கிறேன்." தாஸ: S. கிருஷ்ணஸ்வாமி என்று. (இது திருக்கள்ளம் ஸ்வாமிக்கு அவரெழுதியிருந்தது.)

இதனுல் ஏதோ விவாதம் வளர்ந்திருக்கின்றது போலும் என்று எண்ணினேன் பிறகு ந்ருஸிம்ஹப்ரியாவைப் பிரித்துப் பார்த்தேன். நான்கு பக்கங்கள் கொண்ட கட்டுரை; ஆதி மத்ய அவஸானங்களில் முந்துறமுன்னம் கண் செலுத்தினேன். "கள்ளாழித்திரையைக் கலக்க முடியுமா?" என்ற மகுடத்தின் கீழ் ந்ருஸிம்ஹப்ரியாவுக்கும் ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சநத்துக்கும் விளைந்த விவாதம் ஒருவாறு முடிவு பெற்றதாக எழுதிவிட்டு, அடியேனுடைய ஸ்ரீராமாநுஜனைப் பற்றியெழுதத் தொடங்கி ஸ்துதியும் நிந்தையுமாகக் கலந்த கட்டியாய் வரைந்துள்ளது. ஸ்துதியாவது—

> "மஹாமஹோபாத்யாய ஸ்ரீ பிரதிவாதி பயங்கரம் ஸ்வாமி மஹா வித்வான். அஸாதாரணமான பாண்டித்யம் பெற்ற மஹநீயர் என்பதை அடியேன் விவரிக்க வேண்டிய ஆவச்யகதையில்லை. அந்த ஸ்வாமி நமது தர்சனத்துக்காகச் செய்து வரும் நன்மைகள் பல பல"— இத்யாதிகள்.

அடுத்தபடியாக எழுதியிருப்பதாவது—"இதரஸம்ப்ரதாய தூஷணம் என்ற அநாவசியமான ஓர் அம்சம் அந்த ஸ்வாமியிடம் இல்லாமலிருந்தால் நம் தர்சநத்துக்கு இன்னும் எவ்வளவோ நன்மைகள் விளைந்திருக்கும்......" இத்யாதி. ஸ்ரீ ராமாயணத்தில் திருவடி லங்கைச்வர்யத்தை நோக்கி வியந்து *யத்யதர்மோ ந பலவாந் ஸ்யாதயம் ராக்ஷஸேச்வர:, ஸ்யாதயம் ஸுரலோகஸ்ய ஸசக்ரஸ்யாபி ரக்ஷிதா* என்றுரன்றோ. அதே போல ஹார்தமான அநுதாபத்துடன் எழுதியுள்ளார் நம் திருக்கள்ளம் ஸ்வாமி. அடியேனை இதரஸம்ப்ரதாய தூஷகனுகத் திருவுள்ளம் பற்றிவிட்டாரே இந்தஸ்வாமியென்று மிகமிகக் கிலேசித்தேன். இதற்குமேல் ஒன்றும் எழுதாமலிருந்து விட்டோமானுல் இந்தஸ்வாமியின் திருவுள்ளத்திற்கு மிகவுகப்பாயிருக்குமல்லவா? ஆகவே இக்கட்டுரையை நாம் பாராதது போலவே யிருந்து விடுவோம் என்று தோன்றிற்று. அதற்குப்பரியாயமாகவே சில எழுதி நிற்கிறேன். விவாதத்தை

வளர்த்தும் முறையில் ஓரெழுத்தும் எழுத மாட்டேன். விவாதத்தை வளர்த்த வேணுமென்கிற எண்ணம் சிறிதுமில்லை; நெஞ்சில் ஒரு மூலையிலும் அஃதில்லை. அடியேனோடு நெருங்கிப்பழகும் பலமஹநீயர்கள் இதை உள்ளபடி உணருவர்கள். அந்த மஹநீயர்கள் பெரும்பாலும் வடகலை ஸம்ப்ரதாயஸ்தர்களேயாவர். என்னுடைய ப்ரவசந கோஷ்டிகளில் ச்ரோதாக்கள் நூற்றுக்குப் பத்துப்பேர்கள் தென்கலையாரும். நூற்றுக்குத் தொண்ணூறு பேர்கள் வடகலையாருமாகவே தேறுவர்கள். இந்தமுறை இன்று நேற்றல்ல; 1930 ஆம் வருடத்திலிருந்தே; இதை அடியேன் தற்புகழ்ச்சியாக எழுதிக்கொள்ளவில்லை. திருக்கள்ளம் ஸ்வாமி தமது கட்டுரையின் முடிவில் எழுதுகிறார்—"ஸ்ரீப்ரதிவாதி பயங்கரம் ஸ்வாமியால் வஞ்சிக்கப்படும் தேசிகஸம்பிரதாயத்தைச்சார்ந்த அக்கிலிபிக்கிலிகளான சில அப்பாவிகளைத் தெளிவிப்பதற்காகவே இவ்வளவு அடியேன் எழுதினேனே தவிர ஸ்ரீபிரதிவாதி பயங்கரம் ஸ்வாமியைத் தெளிவிப்பதற்காக அல்ல." என்று. இதனால் சில அக்கிலிபிக்கிலி வடகலையார்கள் அடியேனிடம் ஏமாந்துகிடக்கிறார்கள். என்பதாகத்திருக்கள்ளம் ஸ்வாமி திருவுள்ளம் பற்றியிருப்பது தெரியவருகின்றது. அன்னவர்களுக்கு ஒரு ஜாபிதா எடுக்கவேணுமானால் முந்துற முன்னம் திருக்கள்ளம் ஸ்வாமியின் திருநாமமும் ஸ்ரீமதுராந்தகம் ஸ்வாமியின் திருநாமமுமே குறிப்பிட வேண்டியதாகும். கிம் பஹுநா? ஸ்ரீமத் தேரழுந்தூராண்டவன் முதலாக உயர் பதவியில் வாழ்ந்த-வாழ்கின்ற மஹாஸ்வாமிகளெல்லாரையுமே அந்த ஜாபிதாவில் சேர்க்க வேண்டியதேயாகுமென்பதில் இறையும் ஐயமில்லை. இதை நன்கு மூதலிக்கமுடியும்.

திருக்கள்ளம்ஸ்வாமியின் சில வாக்கியங்களைக் கீழே அநுவதித்திருக்கிறேனல்லவா? மீண்டும் அநுவதிக்கிறேன்; "மஹாமஹிமோபாத்யாய ஸ்ரீ ப்ரதிவாதிபயங்கரம் ஸ்வாமி மஹாவித்வான்; அஸாதாரணமான பாண்டித்யம் பெற்ற மஹநீயர் என்பதை அடியேன் விவரிக்கவேணுமோ? அந்தஸ்வாமி நமது தர்சநத்துக்காகச் செய்து வரும் நன்மைகள் பல பல." இத்யாதி. இத்தகைய வாக்கியங்களையெழுதியுள்ள ஸ்ரீமத் திருக்கள்ளம் ஸ்வாமி அடியேனால் வஞ்சிக்கப்பட்டோ அடியேனிடம் ஏமாந்தோ எழுதியுள்ளாரென்பதில் ஸந்தேஹமுண்டோ? ஆனால் அக்கிலிபிக்கிலியல்லரிவர். என்னுடைய வாக்குகளிலும் நூல்களிலும் ஈடுபட்டவர்களை அக்கிலி பிக்கிலியென்ன வேணுமானால் முந்துற முன்னம் இந்த ஸ்வாமியையேதான் அந்தச்ரேணியில் பரிகணிக்கவேண்டியதாகுமென்பதற்காக இஃதெழுதினபடி. இது நிற்க.

அடியேனுடைய நூல்துறைகள் பதினாறென்று ஸ்ரீராமாநுஜனில் இதழ்தோறும் வெளியாகி வருகின்றது. அத்துறைகளாவன;—

1. நாலாயிர திவ்யப்பிரபந்த திவ்யார்த்த தீபிகை
2. பூர்வாசார்ய தமிழ்ப்பிரபந்த வுரைகள்
3. ஸகல பூர்வாசார்ய ஸ்தோத்ர வுரைகள்
4. ஆழ்வாராசார்யப் பிரபாவ நூல்கள்,
5. இதிஹாஸ புராண சரித்திர „
6. ரஹஸ்யார்த்த விளக்க „
7. வேதாந்தப் பொருள் விளக்க „
8. ஸத்ஸம்ப்ரதாயார்த்த விளக்க „
9. வேதவிசாரலக்ஷண நூல்கள்
10. லோகாபிராம உபந்யாஸ நூல்கள்
11. பரபக்ஷப்ரதிக்ஷேப நூல்கள்
12. உபந்யாஸக ஸௌபாக்ய வெளியீடுகள்
13. வடமொழி நூல் திரள்கள்,
14. ஹிந்தீ பாஷையில் நூல்கள்
15. தெலுங்கு பாஷையில் „
16. பூர்வாசார்ய க்ரந்த வெளியீடுகள்.

இப்பதினாறு துறைகளில் பரபக்ஷப்ரதிக்ஷேபத்துறையென்பதுமொன்று. இத்துறையில் வடமொழி தென்மொழி ஆந்திரம் ஹிந்தி ஆகிய நான்கு பாஷைகளிலும் நமது நூல்கள் வெளிவந்துள்ளன. க்வாளியர் நகரில் வாழும் ஸ்ரீமதுபயவே பண்டிதோத்தம S. ஸத்யமூர்த்தி ஐயங்கார் ஸ்வாமி சில நூல்களை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்தும் வெளியிட்டுள்ளார். திருக்குடந்தை ஸ்ரீமான் அக்நிஹோத்ரம் ராமாநுஜதாதாசாரியார் சில வாண்டுகட்கு முன்பு 'திவ்யப்ரபந்தங்களுக்கும் ஸ்ரீராமாநுஜர்க்கும் ஸம்பந்த கந்தமுமில்லை' என்று ஹிண்டுவில் வெளியிட்டார். அது உபய கலையாரும் கண்டிக்க வேண்டியதாயிருந்தும், ஒருவரும் கண்டிக்கவில்லை. அப்போது, த்ரமிடோபநிஷத்ப்ரபாவ ஸர்வஸ்வம் என்கிற நூலை எழுதி வெளியிட்டேன். (East Godavari Dt.) காகிநாடாவில் வைகாநஸரான ஒரு அட்வகேட் அதை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்துச் சிறந்த முறையில் வெளியிட்டார். ஜகத்ப்ரஸித்தரான ராஜாஜீ (C R.) அவர்கள் 'ஆண்டாளென்று ஒரு வ்யக்தி அவதரித்ததே கிடையாது; பெரியாழ்வார் தாமே கோதையென்று மாறுவடிவங் கொண்டு திருப்பாவையும் நாச்சியார் திருமொழியும் இயற்றி வைத்தார்' என்று த்ரிவேணீ என்கிற ஆங்கில பத்திரிகையில் பிரசுரித்தார். இதுவும் உபய கலையார்களாலும் கண்டிக்கப்பட வேண்டிய விஷயமாயிருந்தும் நபரின் கௌரவத்தை நோக்கி வாளாவிருந்திட்டார்கள். அப்போது நாம் எழுதிய 'பெரியாழ்வார் திருமகள்' என்கிற கட்டுரை வெளிவந்து ஆங்கிலப்புலவர்களாலும் மொழி பெயர்க்கப் பட்டுப் பிரசுரமாகி யுள்ளது. ஸ்ரீ ராமாநுஜன் 330ல் (நிகழும் மார்கழி மாதத்துப் பத்திரிகையில்) வெளியிடப்பட்டதில் 'ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சநபத்ரிகாபிநந்தனம்' என்னுங் கட்டுரையில் இத்தகைய விஷயங்கள் பல வரைந்துள்ளோ மென்பதை நினைவூட்டுகிறோம். ஸ்ரீமத் திருக் கள்ளம் ஸ்வாமி இதற்கெல்லாம் என்ன ஸாதிப்பரென்றால், 'இவற்றை யாரும் அபலபிப்பாரில்லையே; பிரதிவாதி பயங்கரம் ஸ்வாமி நமது தர்சனத்துக்குச் செய்து வரும் நன்மைகள் பல பல வென்று நானும் ப்ரியாவில் எழுதித் தானேயிருக்கிறேன்'' என்று ஸாதிப்பர். அதற்குமேலே இதர ஸம்ப்ரதாய தூஷணம் என்கிற ஓர் அவத்யத்தை அடியேன் மீது ஏறிட்டுள்ளாரே. இதற்கு விஜ்ஞாபிக்கிறேன்.

நம்மாழ்வார் திருவாய்மொழியில் (1-6-4)✳ பிணங்கியமார் பிதற்றும் குணங்கெழு கொள்கையினனே ✳ என்கிற பாசுரத்தில்-பரமபதத்திலும் நித்யமுத்தர்கள் பகவத்குணசர்ச்சையில் ஒருவர்க்கொருவர் பிணங்குவதாக அருளிச் செய்துள்ளார். (பிணங்குதல்) என்பதன் பொருளை நாம் நிகண்டு கொண்டு அறியவேணுமோ? ஸ்வாமிதேசிகன் கோதாஸ்துதியில் ✳ வாசாலயந்தி வஸுதே! ரஸிகாஸ் த்ரிலோகீம் ந்யூநாதிகத்வஸமதாவிஷயைர் விவாதை: ✳ என்றருளிச் செய்திருர். (சிலர் ஆண்டாளுக்கு எம்பெருமானிற் காட்டிலும் தாழ்வு சொல்வதும், சிலர் ஏற்றம் சொல்வதும், சிலர் திவ்யதம்பதிகளுக்குள் ஏற்றத்தாழ்வு சொல்லுவது பிசகு, இருவர்க்கும் ஸாம்யமேயுள்ள தென்று சொல்லுவதுமாக இப்படிப்பட்ட விவாதங்கள் ரஸிக கோஷ்டியில் ஓங்கி வளர்ந்தன வென்றபடி.) இதில் (விபுதா:) என்னுமல் ரஸிகா: என்று ஸ்வாமிஸாதித்தது இன்சுவை மிக்கது. ரஸிகர்திரளில் தோன்றும் விவாதங்கள் வரவேற்கத்தக்கனவென்பது திருவுள்ளம்.

இதரஸம்ப்ரதாய தூஷணம் அடியேன் செய்து போருவதாக ஸ்ரீமத் திருக்கள்ளம்ஸ்வாமி திருவுள்ளம் பற்றியிருப்பதை நான் ஸஹித்திருந்தாலும் உண்மையறிவாளிகளான பல பெரியார்கள் ஸஹியார்கள். தூஷணம் என்பதற்கு—நிந்தை வசவு என்று பொருள். ''ஸவிநயஸப்ரணயவிஜ்ஞாபனம்'' என மகுடமிட்டு எழுதுகிற அடியேனுடைய வியாஸத்தில் தூஷணமோ நிந்தையோ வசவோ யாரைப்பற்றியுள்ளது? சிறிது விவரிக்க முடியுமா?

## ஸாரமான வொருவார்த்தை கேளீர்!

பகவத்கீதையில் ✳ தேஷாம் ஸததயுக்தாநாம் பஜதாம் ப்ரீதிபூர்வகம், ததாமி புத்தி யோகம் தம் ✳ என்றவிடத்து பாஷ்யமிட்ட சங்கராசார்யர் (ப்ரீதிபூர்வகம்) என்பதை (பஜதாம்) என்பதில் அந்வயித்து உரை செய்தார். நமது பாஷ்யகார்ரர் அங்ஙனன்றிக்கே ✳ ததாமியில் அந்வயித்து விவரித்தருளினுர். சங்கரபாஷ்யத்திற் காட்டிலும் ஸ்வாமி பாஷ்யத்தில் என்ன விசேஷமென்பதை தாத்பர்ய சந்திரிகையில் நிரூபித்தருளாநின்ற ஸ்வாமி தேசிகன் ✳ ப்ரீதி பூர்வகமென்பதை ✳ பஜதா மென்பதில் அந்வயிப்பதில் ப்ரயோஜனம் மந்தமென்றும், ✳ ததாமியில் அந்வயிப்பதில் தான் சிறந்த ப்ரயோஜன முள்ளதென்றும் ஸாதித்து, எம்பெருமானுடைய குணதிசயம் விளங்குவது இந்த யோஜனையிலே யாதலால் இதுவே சிறந்ததென்று நிருபித்தருளினுர்தேசிகன்.

✳ தஸ்யாஹம் ஸுலப: பார்த்த! ✳ என்றவிடத்து கீதாபாஷ்யத்தில்—"தத்வியோகம் அஸஹமாந: அஹமேவ தம் வ்ருணே" என்று ஸ்வாமி அருளிச் செய்துள்ளார். இந்த ஸ்ரீ ஸூக்திகளுக்கு அநுகுணமான ஸம்ப்ரதாயம் எதுவென்று நடுநிலையில் நின்று பார்க்க வேணும். திருக்கள்ளம் ஸ்வாமி முதலிலெழுதியுள்ளதை நினைவூட்டுகிறேன். தென்கலையாருடையவும் வடகலையாருடையவும் ஸம்பிரதாயத்தை ஸாரமாகத் தெரிவிக்கையில் (ந்ருஸிம்ஹப்ரியாவில்) எம்பெருமானுடைய நிர்ஹேதுகக்ருபையாலே மோக்ஷமென்பர் தென்கலையார்; ஸ்வப்ரவ்ருத்தியாலே மோக்ஷமென்பர். வடகலையார்—என்னு மபிப்ராயத்தைக்கொண்ட பங்க்திகளெழுதியிருக்கிறுரன்றே? இதில் எந்த பக்ஷத்தில் பகவத்குண ப்ரபாவம் அதிசயிக்குமென்பதைப் பற்றி பகவானைத்தான் கேட்க வேணும்.

பழைய ஸமாசாரமொன்று நினைவுக்கு வருகிறதை மறைத்திடகில்லாமல் எழுதுகிறேன். அடியேன் சென்னைத் தொண்டமண்டலம் ஸ்கூல்ஹாலில் சனிஞாயிறு தோறும் உபந்யாஸம் ஆரம்பித்தபோது M.D. ப்ரதர்ஸ் நால்வர், கனகய்ய செட்டிகம்பெனி நரஸிம்ஹாசாரியார், கிளி மூக்குராஜா முதலான பலபல வடகலைப் பெரியார்கள் தவருது வந்து சிறப்பிப்பதைக்கண்டு பொருத சிலர் "P.B.A. நம்ஸம்ப்ரதாயத்தை வலிதாக தூஷிப்பவர்: அவருடைய காலக்ஷேபங்களுக்கு நீங்கள் செல்வது தகவேதகாது" என்று எழுதியும் சொல்லியும் வந்தார்கள். அவர்கள் அதைக் காது கொடுத்துக் கேட்கவில்லை. பெடரல்கோர்ட் ஜட்ஜ். (ஸ்ரீமதுபயவே,)ஸர். S.வரதாசாரியார் ஸ்வாமி, மாம்பலம் மஹர்ஷி, வாஸுதேவாசார்யஸ்வாமி முதலானுரும் நியதமாக வந்துகொண்டிருந்தபடியாலே அவர்களிடம் சென்று பழம்பாட்டைப் பாடத் தொடங்கினுர்கள், ஸ்ரீ. S. வரதாசார்ய ஸ்வாமி அவர்களை லேசாக விடவில்லை! ஒருநாள் உபந்யாஸ ஸபையிலேயே எழுந்து ஸபையார்களை நோக்கி அவர் ஸாதித்ததாவது—"சிலர் ஸ்வாமி மீது விஷமப்ரசாரங்கள் செய்யக் கங்கணம் கட்டிக் கொண்டு புறப்பட்டிருக்கிறுர்கள், சிபார்சுடன் என்னிடம் சிலர் வந்து......இப்படி யிப்படி பழிப்பு சொன்னுர்கள். அவர்களுக்கு நான் சொன்னேன். "P. B. A ஸ்வாமி பிரசுரிக்கிற புத்தகங்களெல்லாம் என்னிடமும் தவருமல் வருவதுண்டு; ஒரு தூஷணையும் எனக்குத் தென்படவில்லை. அவருடைய கேள்விகளுக்கு பதில் சொல்லமாட்டாதவர்கள் தூஷிக்கிறுர், நிந்திக்கிறுர்... என்றுதான் வசை கூறித் திரியவேண்டும்—என்று சொன்னேன்' என்றுர்; மஹர்ஷி வாஸுதேவாசார்ய ஸ்வாமியும் இதை ஆமோதித்துப் பேசினுர்.

இது தவிர, அடியேனிடம் தனியாக ஸாதித்ததும் கேளீர். தேவப்பெருமாளுக்கு ஏழு நாள் வஸந்தோத்ஸவ உபயம் அவர் (S. வரதாசார்யர்) நடத்திக் கொண்டிருந்தார்; அப்போது இரண்டு மூன்று நாள் காஞ்சியில் தங்கியிருந்தாராம். ஒருவர் மாறி ஒருவராக வந்து 'அண்ணு

அப்படி எழுதியிருக்கிறார், இப்படியெழுதியிருக்கிறார், அவருடைய காலக்ஷேபத்திற்கு தேவரீர் ஏளக்கூடாது என்றார்களாம். அண்ணா எழுதியிருப்பதைக் கொணர்ந்து காட்டுங்கள் என்று ஒவ்வொருவரிடமும் சொன்னேன்; இதோ கொண்டு வருகிறேனென்று சொல்லிப் போனவர்கள் திரும்பி வரவில்லை.'' என்று.... இதெல்லாம் திருக்கள்ளம் ஸ்வாமி போல்வார் இன்றாக உணரு மவையல்ல.

''வலுச்சண்டைக்குப் போகமாட்டேன், வந்த சண்டையை விடமாட்டேன்'' என்று பல கால் எழுதியிருக்கிறேன்: அஸ்மத்ஸம்ப்ரதாய தூஷணங்கள் செய்பவர்களுக்கு அடியேன் பதில் எழுதினவையே யொழிய ஸ்வதந்திரமாகக் கண்டன நூல் எழுதினதில்லை. பிறர் எழுதுவது மூலைமுடுக்குகளில் நிற்பன, நானெழுதுமவை நாடு நகரமும் நன்கறிய நிற்பன. ஆனது பற்றியே P.B.A தூஷிக்கிறார், நிந்திக்கிறார் என்று பறைசாற்றிவருகிறார்கள். விவேகிச்ரேஷ்டரான நம் திருக்கள்ளம் ஸ்வாமியும் அன்னவர்களின் திரளில் சேருவது தகுதியன்று என்று விநீதனாய் விஜ்ஞாபிக்கிறேன்.

ஒரு வேடிக்கைக் கேளுங்கள்.

மலையாளத்தில் சித்தூர் என்று ஒருநகரமுள்ளது. அங்குப் பெரியதொரு ஸம்ஸ்க்ருத கலாசாலையுள்ளது. ஒருகால் நான்அவ்விடம் சென்றபோது பாடசாலாத்யக்ஷருடைய கோரிக்கையின் மேல் வித்யார்த்திகளைப் பரீக்ஷிக்கநேர்ந்தது. காளிதாஸ மஹாகவி ஒருநூலில் * மலிநமபி ஹிமாம்சோர் லக்ஷ்ம லக்ஷ்மீம் தநோதி * என்கிறார்; மற்றொரு நூலில் * ஏகோ ஹி தோஷோ குணஸந்நிபாதே நிமஜ்ஜதீந்தோ: கிரணேஷ்விவாங்க: * என்கிறார். இரண்டுக்கும் ஸமந்வயம் எப்படி? என்று கேட்டேன். (கேள்வியின் கருத்தை விளக்குகிறேன். சந்திரனிடத்தில் களங்கமிருப்பது ப்ரஸித்தம்; அந்தகளங்கத்தைப் பற்றிக் காளிதாஸகவிஇரண்டிடத்தில் இரண்டு விதமாகக் கூறுகின்றார்; * ஹிமாம்சோ: லக்ஷ்ம மலிநமபி லக்ஷ்மீம் தநோதி—களங்கம் சந்திரனுக்கு சோபையைத் தருகின்றது—என்றார். மற்றோரிடத்தில் * அங்க: இந்தோ: கிரணேஷு நிமஜ்ஜதி அந்த களங்கமானது சந்திரகிரணங்களில் தனிப்படத்தெரியாமல் (அஸத்ப்ராயமாய்) மறைந்து போகிறது என்றார். சோபாவஹமாகிறது என்பதற்கும் அஸத்கல்பமாகிறது என்றதற்கும்பொருத்தமில்லையே, எப்படி ஸமந்வயம்? என்று கேட்டேன்.) உபாத்யாயர்களுட்பட எல்லாரும் சிறிது போது ஆலோசித்து விட்டு ''மஹாகவி: காலிதாஸ: கிம் பவத்பி: தூஷ்யதே? நைதத் யுக்தம்' —மஹாகவியான காலிதாஸரை நீங்கள் தூஷிக்கிறீர்களா? இது சரியல்ல என்றார்கள். இதற்குச் சிரிப்பதா? அழுவதா? கேள்வி கேட்டது அவர்களுக்கு தூஷணமாகப் பட்டுவிட்டது. [கிம் கநிஷ்டா:? கிமு ஜ்யேஷ்டா;? தேஷா மேதே மஹாசயா:-]

ஸ்வாமி தேசிகன் நூறு தூஷணங்கள் சொல்லுவதாக வைத்து சததூஷணியருளிச்செய்தார். அந்த தூஷணங்கள் யாரை நோக்கியவை—என்பதை நன்கு தெரிந்து கொண்டிருக்கிறோம். ஸச்சரித்ர ரக்ஷையில் *ப்ரஹராமி மூர்க்காந் * [மூர்க்கர்களைப் புடைக்கிறேனென்றார். அந்த மூர்க்கர்களையும் தெரிந்து கொண்டிருக்கிறோம். பரமபவித்திரமான ரஹஸ்யக்ரந்தத்தில், ''அப்படி கலங்குவர்கள், அந்த கலக்கத்தை சமிப்பிக்கிறோம்; இப்படி கலங்குவர்கள், இந்த கலக்கத்தை சமிப்பிக்கிறோம்; * இதி மந்தை ரிதம் ப்ரோக்தம் * * த்ருட பூர்வச்ருதோ மூர்க்க: தர்மாணும் அவிசாரத: அந்யதா மந்தபுத்தீநாம் ப்ரதிபாதி துராத்மநாம் * இத்யாதி ஸம்பாவனைகள எந்த வ்யக்திகளை நோக்கியவை? என்று ஜிஜ்ஞாஸயா கேட்டால் இதை தூஷணமென்று பறை சாற்றுவது! அந்த மந்தர்களும் மந்தபுத்திகளும் துராத்மாக்களும் மூர்க்கர்களும் விப்ராந்தேந்த்ரியர்களும் இன்னாரென்று தெரிந்து கொள்ள விரும்பினால் இது

பிசகா? இது நிந்தையா? இது தூஷணையா? ஆம் ஆம் என்னில் இக்கேள்விகளை அறவே விட்டிட்டோம். விட்டிட்டோம்; விட்டிட்டோம்.

ஸ்ரீமத்பரமஹம்ஸ தென்பரையாண்டவன் ஒருஸமயம் ஸ்ரீரங்கத்திலிருந்து ஸ்ரீகார்யஸ்தர் மூலமாக வொரு ஸ்ரீ முகம் ஸாதித்து "அவ்விடத்து வாதவிவாதக்ரந்தங்களையெல்லாம் ஸம்ஸ்க்ருத த்ராவிடங்களில் ஒன்று விடாமல் இவ்விடத்திற்கு அனுப்பிவைக்கச் செய்யவேணும் என்று நியமித்தருளினர். உடனே இருபத்தெட்டு நூல்களையனுப்புவித்தேன். இரண்டொரு வாரத்திற்குள் எல்லாவற்றையும் கடாக்ஷித்தருளி அநுக்ரஹித்தருளின ஆநந்த ஸாந்த்ர ஸ்ரீமுகம் பலகால் வெளிவந்துள்ளது. தற்காலம் சென்னையில் கைவசமில்லாமையால் அநுவதிக்ககில்லேன்.

## —: ஸ்ரீமதுராந்தகம் ஸ்வாமி ப்ரசம்ஸை :—

நேற்றைத் தபாலில் ஸ்ரீ மதுராந்தகம் ஸ்வாமி கைவல்ய வாதம் என்று நாலு பக்கமுள்ள காகிதம் அச்சிட்டனுப்பினர். அதை மற்றும் பலரும் வாசித்திருப்பர்களே. வித்வானென்று பேர் சுமப்பவர் இப்படியா எழுதுவது? ✳ ஜரத்கவாதிவாக்யார்த்தமென்று ஒன்றுண்டு. அதற்கு இது தான் ப்ரத்யக்ஷலக்ஷ்யம். வடமொழி தென் மொழிகளை நன்கு கற்ற வொருவரைத் துணை கொண்டு எழுதலாகாதா? ✳ ஸ்வய மபி லிகிதம் ஸ்வயம் ந ஜாநாதி ✳ என்னும் படியாகவா எழுதுவது? இதில் ஒருவரிக்காவது ஒருவர் பொருளுணர முடியுமா? இடையில் "ப்ரேம பரீவாஹ ரூபமான பதிலும் ஸ்ரீ காஞ்சீ ஸ்வாமி எழுதியுள்ளார்" என்கிறர். அதை இன்னதென்று ஒருவர் உணர முடியுமா? வல்லின இடையினத் தடுமாற்றமோ அபாரம். 50—60 ரூபா தண்டச் செலவு செய்துள்ளார் அந்தோ! 'ஐச்வர்ய கைவல்யங்கள் அல்பாஸ் திரங்கள்' என்பதற்கு—ஐச்வர்யம் அஸ்திரம், கைவல்யஸுகம் அல்பம் என்று பொருளறிய மாட்டாதவர் "த்யாஜ்யோ பரதேயங்கள் ஸுகதுக்கங்கள்" என்பதற்கு—ஸுகம் த்யாஜ்யம், து:க்கம் உபாதேயம். என்று பொருள் கொள்ள வல்லவரேயாவர். ✳ ஏகாநேகஸ்வரூபாய ஸ்தூலஸூக்ஷ்மாத்மநே நம: ✳ அலம் அலம் அலம். ... ... ... ... ... ... ... ✳

உபஸம்ஹாரம்:- சுருக்கமாகவெழுத வெண்ணித் தொடங்கி மிக வளர்ந்திட்டது. நிகமிக்கிறேன். தேசிக திவ்யஸூக்திகளில் அடியேனுக்குத் தோன்றும் ஸந்தேஹங்களை இனிப் பெரியார் பாடே கேட்டுத் தெளிந்து கொள்ளுகிறேன். தேசிகஸூக்திகளையும், மற்றும் நாதயாமுநயதிவர கூரநாத பட்டார்ய ஸ்ரீஸூக்திகளையும் அருளிச்செயல் சந்தைகளையும் உதாஹரித்து க்ரந்தங்களெழுதினவர்கள் தேசிகன் காலந் தொடங்கி (வடகலைஸம்பிரதாயத்தில்) இற்றைக்கு 250, 300 ஆண்டுகட்கு முன்வரையில் யார் யார்? என்று கேட்டிருந்தேன். இதற்கு விடையிறுத்திருப்பதாகத் தெரிவிக்கிறர். இதை ஆராயப்புகுந்தால் ✳ புநராயாந்மஹாகபி: ✳ என்னும்படியாயிருக்கும். ஸஹ்ருதய ஸுஹ்ருந்மணியான ஸ்ரீமத்திருக்கள்ளம் ஸ்வாமியின் திருவுள்ளத்தை உகப்பிக்க வேணுமென்று அத்யவஸித்தபின்பு அந்த சர்ச்சைகளில் புத்திசெல்லவில்லை. ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சநபத்ரிகையில் தொடர்ந்து பிரசுரமாகி வரும் கீதாவியாக்கியானத்திலிருந்து கைவல்ய விசாரம் ப்ரஸக்தமாகிப் ப்ரஸக்தாநுப்ரஸக்தமாக வளர்ந்து சென்றவை; சாந்தமாகிவிட்டனவென்று ஸ்ரீவைஷ்ணவவுலகம் ✳ தழைநல்ல, வின்பம் தலைப்பெய்து எங்கும் தழைக்கவே ✳......

ஸ்ரீவைஷ்ணவதாஸ : P. B. A.

# மதுரை கூடலழகர் திருக்கோயில் திருப்பணிக் குழுவினரின்
# வேண்டுகோள்

சங்கம் வைத்துத் தண்டமிழ் வளர்த்த மதுரைமாநகர் பண்டைநாளில் திருமால் திருநெறிபோற்றிய திருத்தலமாகவும் சிறந்து விளங்கியது. மதுரையில் எழுந்தருளியிருக்கும் கூடலழகரைச் சங்கத்துச் சான்றோரும் மற்றோரும் வழிபட்டனர். மேலும் ஆழ்வார்களின் மங்களாசாசனம் பெற்ற நூற்றெட்டுத் திவ்ய தேசங்களில் கூடலழகர் திருக்கோயிலும் ஒன்றாகும். பாண்டியநாட்டுப் பதினெட்டு திவ்ய தேசங்களில் முதன்மையானதுமாகும். பெரியாழ்வாரும், திருமங்கை மன்னனும் கூடலழகரின் திருமேனியழகினையும் பரத்துவ மேன்மையினையும் செந்தமிழ்ப் பாக்களில் போற்றியுள்ளார்கள். நாலாயிர நான்மறையுள் பிரணவப் பொருளாம் திருப்பல்லாண்டு பாடப்பெற்ற திவ்வியதேசமாகும்.

இங்கு எழுந்தருளியிருக்கும் மூலவர் திருநாமம் அருள்மிகு கூடல் அழகர். உத்ஸவமூர்த்தியை அருள்மிகு வ்யூஹ சுந்தரராஜன் என்று கூறுவர். தாயார் திருநாமம் அருள்மிகு மதுரவல்லி இங்கு கோயில் விமானத்திற்குத் தென்புறம் தனிச்சந்நிதியில் தாயார் எழுந்தருளியிருக்கிறார். சூடிக் கொடுத்த நாச்சியார் என்கிற அருள்மிகு ஆண்டாள் சந்நிதி விமானத்திற்கு வடபுறம் அமைந்துள்ளது. நவக்கிரகங்கள் சந்நிதியும் இங்கு உண்டு. தாயார் சந்நிதியின் முன்புறம் ஆழ்வார் ஆசார்யர்கள் சந்நிதி நம்மை வரவேற்கிறது. ஆசார்யர்களுள் ஸ்ரீமந்நாதமுனிகள், ஸ்ரீராமானுஜர், ஸ்ரீகூரத்தாழ்வான், ஸ்ரீவேதாந்த தேசிகன், ஸ்ரீமணவாள மாமுனிகள் முதலானோர் எழுந்தருளியுள்ளனர்

அருள்மிகு ஆண்டாளின் திருத்தகப்பனாரான பெரியாழ்வார் இக்கூடல் மாநகருக்கு எழுந்தருளிப் பாண்டிய மன்னன் ஸ்ரீ வல்லபதேவன் கூட்டிய வித்வத் சபையில் தோன்றி ஸ்ரீமந் நாராயணனே பரம்பொருள் என்ற வேதார்த்தத்தை சுருதி ஸ்மிருதி இதிகாச புராண வசனங்களால் நிறுவினார், பாண்டிய மன்னனும் பெரியாழ்வாரை ஆனை மேல் ஏற்றித் தானே ஆழ்வாருக்கு இரு கைகளாலும் சாமரம் வீசி ஊர்வலம் நடத்தினான். இவ்வைபவத்தைக் கூடல் நாயகனான சுந்தரராஜனும் நேரில் கண்டுகளிக்க ஆழ்வார் முன் பிராட்டிமாருடன் ஸ்ரீகருடாழ்வார் மீது வீற்றிருந்து தோன்றினான். அருள்மிகு கூடல் அழகரின் வடிவழகிலே துவக்குண்டு அவ்வழகுக்குக் கண் எச்சில் கழிப்பதற்காக ஆனைமேல் கிடந்த மணிகளையே தாளமாகக் கொண்டு திருப்பல்லாண்டு பாடியருளினார். ஆகவே திருப்பல்லாண்டு விளைந்த திவ்யதேசம் என்று கூடல் மாநகரை ஆதரித்துப் போற்றுவார்கள்.

சிற்பக் கலைக்குச்சிறந்த எடுத்துக்காட்டாக விளங்குவது இக்கோயிலின் அஷ்டாங்க விமானம். இவ்விமானம் கண்ணைக்கவரும் வனப்பும், சிற்ப நுட்பமும் கொண்டது. மூன்று தளங்களும் ஐந்து சிகரங்களும் கொண்டு கம்பீரமாகத் தோற்றமளிக்கும் இவ்விமானத்தைப் புராணங்கள் புகழ்ந்து பேசுகின்றன. கீழே

அடித்தளத்தில் வீற்றிருந்ததிருக்கோலத்தில் அழகர் காட்சியளிக்கிறார். இவ்வெம் பெருமானைத்தான் இருந்தையூர் அமர்ந்த செல்வன் என்று பரிபாடல் பாராட்டுகிறது. இரண்டாவது தளத்தில் நின்றதிருக்கோலத்தில் ஸ்ரீ சூரியநாராயணனும் மூன்றாவது தளத்தில் க்ஷீராப்திநாதனும் சேவை சாதிக்கிறார்கள். இத்துணைச் சிறப்புவாய்ந்த அஷ்டாங்க விமானத்தின் நிழல் தரையில் ஒருபோதும் வீழ்வதில்லை, இது நம் முன்னோரின் சிற்பக்கலை நுட்பத்திற்குச் சிறந்த எடுத்துக்காட்டாகும்.

ஆன்மீக சக்தியை வளர்த்து மக்கள் அனைவரும் நலமாக வாழ்வதற்கு நிலையமாகவே இத்தகைய பெருங்கோயில்களைத் தீர்க்கதரிசிகளான நம்முன்னோர்கள் எழுப்பினார்கள். இக்கோயில்களைப் பராமரித்து நன்முறையில் திருப்பணிகள் செய்து பின்வரும் பரம்பரையினருக்குக் கோயில்களாகிய குலதனத்தை வழங்கவேண்டுவது நம்கடமையாகும். திருப்பணி வேலைகள் விரைவாக நடந்தேறிவருகின்றன. முழுதும் நிறைவேறி இத்திருக்கோயிலின் மகாகும்பாபிஷேகத்தைச் சிறப்புடன் நடத்த அன்பர்களின் நன்கொடைகளை ஆவலுடன் எதிர்பார்க்கிறோம்.

**மகா கும்பாபிஷேகம்: 5—2—76 வியாழக்கிழமை காலை 8-50க்குமேல் 9-05க்குள்.**

திரு. P. A. C. R. ராமசுப்பிரமணியராஜா, திருப்பணிக் குழுத் தலைவர்.

திரு. சிவஞண்டி, பி.ஏ., (நிர்வாக அதிகாரி).

செயலாளர், பொருளாளர், திருப்பணிக்குழு,
14—12—75.

மற்றும் திருப்பணிக் குழுவினர்

---

புத்தக விமர்சனம்

# அருள்மிகு இராகவ காவியம்

**1, 2, 3 பாகங்கள்**

ஆசிரியர்:—'கவிமாமணி' ஸ்ரீ. உ. வே. தி. வேங்கடகிருஷ்ணய்யங்கார், M.A; B.O.L.

கிடைக்குமிடம்:— **வானதி பதிப்பகம்,**
82/11, தி. நகர், சென்னை—600017.

விலை:— பாகம் 1—ரூ. 11/- பாகம் 2—ரூ. 15/- பாகம் 3—ரூ. 15/-.

நம்மாழ்வார் அவதரித்த திருக்குருகூரைச் சேர்ந்த இந்நூலாசிரியர், இந்நூலை வெண்பாக்களும், விருத்தங்களும், துறைகளுமாக ஆறுயிரம் பாடல்களில் அமைத்துள்ளார். ஸ்ரீ வான்மீகி, கம்பர், துளசிதாஸர் முதலியோருடைய இராமாயணங்களின் சிறந்த அம்சங்களும், இவ்வாசிரியரின் சொந்தக் கற்பனைகளுஞ் சேர்ந்து இந்நூல் வளம்பெறப் புதிய முறையில் அமைந்துள்ளது.

ஜனகரின் பூங்காவில் சீதை—இராம சந்திப்பு, ஊர்மிளை விரகம், குகப் பெருமாள் ஸ்ரீராமபிரானின் ஸ்ரீபாத தீர்த்தத்தைப் பருக எண்ணிப்பேசும் நாநலம், பஞ்சவடிப் பிரகரணம் போன்ற பல புதிய இடங்கள் ஆசிரியரின் கற்பனை வளத்தைக் கவினுறக் காட்டுகின்றன.

இவ்வாசிரியர் பக்திப் பெருக்குடன் இப்பெருங் காப்பியத்தை இயற்றியுள்ளார் என்பதை இதைப் படிப்போர் தெள்ளிதின் உணர முடியும்.

பாடல்கள் எளிமையும் இனிமையும் இன்சுவையும் அணிநலமும் பெற்று அழகுற விளங்குகின்றன. நாகபாச நீங்குபடலத்தில், கருடன் இராமனைத் துதிப்பதாகவரும் பாடல்களுள் ஒன்றை ஈண்டு மேற்கோள் காட்டுதும்.

'உருவாயும் நிற்றி, அருவாயும் நிற்றி உலகப்பொருள்கள் அனைத்தும்
கருவாயு மானாய் முடிவின்கண் எல்லாம் தன்னேரிலா துயர்ங்க
பெருவாயி னுண்டு வியற்றுள் ளடக்கிப் பின்னும் படைக்கும் பெரும்
தெரிவாரும் யாருன் பெருமாயம் தன்னைத் தேவாதி தேவ உலகில்!

விப்ரலம்ப சிருங்காரமாக அமைந்துள்ள 'ஊர்மிளை விரகம்' மிகவும் அழகாக உள்ளது. விரகத்தால் வெளிப்படும் கண்ணீரைப்பற்றிய கவிஞரின் கற்பனை அழகியது.

"கண்ணின் பாவை இடங்கன்னில் காதற் பதியை வைத்திருந்தாள்
அண்ணல் அவளின் உளநீரில் ஆடக் குதித்தான் அதலினால்
தண்ணீர்த் துளிகள் பலநெறித்துத் தழைத்து வெளியே வந்தனவால்
கண்ணீர் என்பர் அவைதம்மை, கழிநற் கற்பனை இல்லாதார்!"

ஆழ்வார் பாசுரங்களில் இவ்வாசிரியரின் ஈடுபாடும் தோய்வும் பல இடங்களில் காணக்கிடைக்கின்றன. 6000 பாடல்களால் இந்நூலை அமைத்ததே, 6000 படி வியாக்கியானத்தையும், 6000 ச்லோகங்களாலான விஷ்ணு புராணத்தையும் ஆசிரியர் மனத்தகத்தே கொண்டுள்ளதைக் காட்டுகிறது.

"மாறனின் திருமிகுந்த வாய்மொழிக் குரையாய் வாய்ந்த
ஆறுடை ஆயிரத்தின் படியினின் அளவ தாகி
ஏறிய பாடல் கொண்ட நூலிதை இயம்பு வார்கள்,
மாறிலா இன்ப முற்று மாலருள் பெற்று வாழ்வார்."

என்னும், இக்காவியத்தை முற்றுவிக்கும் பாடல், ஆசிரியரின் பக்தியையும், திராட்சாபாகமாகக் கவிபுனையும் ஆற்றலையும் எடுத்துக்காட்டுகிறது.

பல பெரியோர்களின் ஆசிகளையும் வாழ்த்துப்பாக்களையும், பாராட்டுதல்களையும் பெற்றுள்ள இந்நூல் ஒரு புதிய, அரிய, பெரிய முயற்சியாகும். தமிழர்கள் அனைவரும் வாங்கிப் படித்து இன்புறவேண்டிய நூல். இத்தகைய சிறந்த மகா காவியத்தைப் படைத்த இந்நூலாசிரியருக்கு எமது பாராட்டும் வாழ்த்தும்! (P.B A.)

# வைதிக மநோஹரா - பிரகடனம்

*ஸ்ரீராமாநுஜனோடுகூடவே ஆரம்பிக்கப்பட்டு நடந்துவருகிற வைதிகமநோஹரா என்கிற நமது ஸம்ஸ்க்ருத மாஸிகபத்ரிகை நம்முடைய ஆரோக்யக்குறையினாலும் அச்சுக்கூடத்தின் சௌகரியக்குறையினாலும் எழெட்டுமாதமாக நடைபெறாமலிருந்து இம்மாதம் பழையபடியேநடைபெறுமாறு எம்பெருமானநுக்ரஹம் ஏற்பட்டுள்ளது. இதற்கு வடநாட்டில் அதிக ப்ரசாரமானாலும் தென்னாட்டிலுள்ள ஸம்ஸ்க்ருத பண்டிதர்களுக்கும் இதை அனுப்பிவருவதுண்டு. அட்ரஸ் லிஸ்ட் கைதவறிவிட்டபடியால் அபேக்ஷையுள்ளவர்கள் தெரிவித்துக்கொள்ளவேணும்.*

*மானேஜர்—வைதிக மநோஹரா, காஞ்சீபுரம்.*

## P. B. அண்ணங்கராசார்ய ஸ்வாமிகளின் நூல் துறைகள்.

1. நாலாயிர திவ்யப்பிரபந்த வுரைகள்,
2. பூர்வாசார்ய தமிழ்ப்பிரபந்த ,,
4. ஸகல பூர்வாசார்ய ஸ்தோத்ர ,,
3. ஆழ்வாராசார்யப் பிரபாவ நூல்கள்,
5. இதிஹாஸ புராண சரித்திர ,,
6. ரஹஸ்யார்த்த விளக்க ,,
7. வேதாந்தப் பொருள் விளக்க ,,
8. ஸத்ஸம்ப்ரதாயார்த்த விளக்க ,,
9. வேதவிசாரலக்ஷண நூல்கள்
10. லோகாபிராம உபன்யாஸ நூல்கள்
11. பரபக்ஷப்ரதிக்ஷேப நூல்கள்
12. உபந்யாஸக ஸௌபாக்ய வெளியீடு
13. வடமொழி நூல் திரள்கள்,
14. ஹிந்தீ பாஷையில் நூல்கள்
15. தெலுங்கு பாஷையில் ,,
16. பூர்வாசார்ய க்ரந்த வெளியீடுகள்.

விரிவான இயாடலாகுகள் தருவித்து விவரங்காண்க.

சந்தாப்பணம் M: O. செய்பவர்கள்

*Editor*, GRANTHAMALA, Kancheepuram-631503

என்ற விலாசத்திற்கு அனுப்புக.

---

If un-delivered please return to :

P. B. ANNANGARACHARYA,

KANCHIPURAM Pin Code-631503

---

To

**Sriman / Srimathi**



690. P.A.Thiruvenkatacharya,
16, M.M.Sannidhi Street,
SRIPERUMBUDUR (602105)

---

Edited and Published by P. B Annangaracharya Swami
for Madras Sathgrantha Prakasana Sabha.

Wrapper Print Sri Kamakshi Press, Kanchipuram-3.